# அருள்

தெய்வம் இகமேல்

8/72







மயிலை ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
75-வது ஆண்டு விழா






தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 6 ] பரிதாவி ஆவணி (17-8-72) [கருணை 11

வயலூர் வள்ளல் தோத்திரங்கள்

## முருகன் துதிகள்

மூலிகையின் வித்துணர்ந்த வயலூர் வாழ்
முக்கண்ணன் தன்புதல்வா!
வாலிபத்தில் என்பணிகொள் வயலூர் நன்
முருகையா ! யான் மிகவும்
கேலிக்கை என்றிடும்ஆழ் கிணற்றதனில்
வீழ்ந்தலந்தேன் வீரஞான
வேலி கட்டி விதிகளைந்து வினை தீர்த்தல்
நின்கடனே தானலவோ

—இயற்றியவர் பசிப்பிணி மருத்துவர்
உறையூர் மு. ஆ. அருணாசல முதலியார் அவர்கள்

---

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி:
நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், சென்னை-37.

# பஜகோவிந்தம்

## ஸ்ரீ ஆதிசங்கரர்



அங்கம் தளர்ந்து விட்டது, தலை நரைத்துவிட்டது, வாய் பல் இல்லாததாக ஆகிவிட்டது; கிழவன் கோலையூன்றிக்கொண்டு நடக்கிறான்; என்றாலும் அவனுடைய மாம்ஸ பிண்டத்தை ஆசைவிடவில்லை.

குழந்தையாயிருக்கும் பொழுது விளையாட்டில் பற்று; யௌவனத்தில் பருவப் பெண்ணிடம் பற்று; வயது முதிர்ந்தபொழுது கவலை; பரப்பிரம்மத்திடம் பற்றுக்கொண்டவன் எவனுமில்லை.

இறந்தால் மறுபடி பிறப்பு; பிறந்தால் மறுபடி இறப்பு; மறுபடியும் ஒரு தாய் வயிற்றில் முடங்குதல்; கரைகாணாததும் கடத்தற்கரியதுமான இவ்வாழ்க்கைக் கடலினின்று என்னைக் காத்தருளும், பகவானே!

பகலுக்குப் பின் பகலும் இரவுக்குப்பின் இரவும், பக்ஷங்களும் மாதங்களும், கோடைகாலமும் குளிர்காலமும், ருதுவுக்குப் பின் வருஷமும் மாறாமல் வந்து போய்க் கொண்டிருக்கின்றன. வீண் ஆசைகளும் ஸங்கல்பங்களும் எவனையும் விட்டுப் போவதாயில்லை.

வயதுகடந்தால் காமக்கிளர்ச்சி என்ன ஆகிறது? நீர் வற்றினால் குளம் என்ன ஆகிறது? பொருள் அழிந்தால் சுற்றம் என்ன ஆகிறது? உண்மை உணரப்பட்டால் ஸம்ஸாரம் என்ன ஆகிறது?

ஸ்திரீகளின் நகில்களையும் நாபிப்பிரதேசத்தையும் பார்த்து மதிமயங்காதே. இவை மாம்ஸம் கொழுப்பு இவைகளின் விகாரமென்று அடிக்கடி எண்ணி மனதில் பொருட்படுத்தாமலிரு.

நீ யார்? நான் யார்? எங்கிருந்து வந்தோம்? என் தாய் யார்? தந்தை யார்? இப்படித் தன்னுடைய பிறவித்தளைகளை நன்றாய் விசாரித்துப் பார்த்து இவையெல்லாம் கனவுக்கொப்பானவை எனக் கண்டு கொள். ○

● ராமேஸ்வரம் கோவில் மிகப் புராதனமானது. இதில் விளங்கும் சிவலிங்கம் சக்கரவர்த்தித்திருமகனுராகிய ஸ்ரீ ராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பெருமையுடையதாகும்.

● காசியும் ராமேஸ்வரமும் நமது இந்து சமய மக்கள் அனைவரும் போற்றும் பெருஞ்சிறப்பு வாய்ந்தனவாகும். பாரததேசம் முழுவதிலும் பரவியுள்ள சோதிலிங்கத் தலங்கள் பன்னிரண்டினுள், இராமேஸ்வரமும் ஒன்று.

● நாட்டில் சைவ-வைஷ்ணவ பேதமின்றி நாடு முழுவதும் பக்தியை வளர்க்க திருப்பாவை திருவெம்பாவை ஆகிய இரண்டையும் சேர்த்து மக்கள் ஓதவேண்டுமென்று திருப்பாவை-திருவெம்பாவை திருமுறை அறங்க மகாநாடு என்ற மகாநாட்டை முதன் முதலில் திருவிடைமருதூரில் காஞ்சிகாமகோடி பீடாதிபதி சங்கராச்சார்யார் சுவாமிகள் கூட்டி மிக அரிய உபந்யாசம் செய்தார்கள்.

● அருச்சுனப் பெருமான் வேத விதிப்படியும், சிவாகமங்கள் செப்பியநெறிப்படியும்ஐந்தெழுத்தைஓதி திருவெண்ணீறு பூசிக்கொண்டான் என்று மகாபாரதம் கூறுகிறது.

● இந்தியாவிலுள்ள பன்னிரண்டு ஜோதிர் லிங்கங்களுள் ஒன்று ராமேஸ்வரத்திலுள்ளராமலிங்கம். மற்றவை காசி, கேதாரம், சோமநாதம், உஜ்ஜியினி, ஓங்காரம்(நர்மதை) வைத்தியநாதம், பீமசங்கரம், நாகேசம், திரியம்பகம் (நாசிக்கு அருகிலுள்ளது) குசுமேசம், ஸ்ரீசைலம் ஆகும்.

● குளிக்காவிட்டால் நஷ்டம் நமக்குத்தான் தண்ணீருக்குஅல்ல. அதுபோல், கடவுளை நினைக்காவிட்டால் நஷ்டம் நமக்குத்தான் கடவுளுக்கல்ல.

● மாட்டின் உடம்பெல்லாம் பால் நிறைந்திருந்தாலும் மடியின் மூலமாகத்தான் பால் பெறவேண்டும். அதுபோல், கடவுள் எங்கு நிறைந்திருந்தாலும் ஆலயத்தின் மூலமாக அவர் அருளைப் பெறவேண்டும்.

● திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் வருடவருமானம் இப்போது ரூ 9 கோடியாகும் என்று ஆந்திர அறநிலைய மந்திரி அண்மையில் ஆந்திர அசெம்பிளியில் தெரிவித்தார்.

● திருமலை திருப்பதி தேவஸ்தானம் டில்லியில் ஒரு கல்லூரி நடத்துகிறது. மற்றும் 14 கல்விஸ்தாபனங்களை நடத்துகிறது. ஸ்ரீ வெங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்துக்கு வருடத்திற்கு ரூ 2-5 லட்சம் கொடுக்கிறது. சங்கீத நாட்டிய கல்லூரிகள், சிற்பக்கலை பயிற்சி நிலையங்கள் நடத்துகிறது.

● பன்னிரு திருமுறைகளும் பரம் பொருளாகிய சிவபெருமா

னின் அருளால் அடியார்கள் மூலம் நமக்குக் கிடைக்கப் பெற்றுள் ளன. திருஞான சம்பந்தர், திரு நாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் ஆகிய பெருமக்கள் சிவன ருளில் தோய்ந்து, சிந்தை சிவமா கிய நிலேயில் உலகம் உய்யப் பாடி யவையே இத்திருமுறைகள்.

● சைவத் திருமுறைகள் பன் னிரண்டு. இவற்றை அருளிச் செய்த ஆசிரியர்கள் 27. இவை தமிழ்வேதம் எனப்படும். தெய் வச் சேக்கிழார் பெருமான் அரு ளிய தனித் தமிழ் காவியமான பெரியபுராணம் பன்னிரண்டா வது திருமுறையாகும்.

● வீட்டில் ஞானிகள், அறி ஞர்கள் கடவுள் படங்களே மாட்ட வேண்டுமே தவிர, சினிமாப் படங் களே மாட்டக்கூடாது.

● தேங்காய் உள்ளே பரிசுத்த மாக இருப்பதுபோல் மனத்தை யும் பரிசுத்தமாக வைத்துக்கொள் என்பதைக் காட்டவே கோயி லில் தேங்காய் உடைப்பது.

● திருமணகாலத்தில் மண மக்கள் மீது அட்சதை தூவும் கார ணம், அவர்களுக்கு ஞானம் என்ற முளே தோன்றட்டும் என்றுதான். குத்தாத, உரித்த அரிசியில் அட் சதை தயாரித்து மணமக்கள் மீது இட்டு ஆசி கூறவேண்டும். உலக் கையால் குத்திய அரிசியில் தயா ரித்தது அட்சதையாகாது.

● வருகிற ஏழைகளுக்கெல் லாம் இல்லேயென்னுது சோறு போட்டால்ஒருநாள்ஆண்டவனே நம்வீட்டுக்கு வருவார். எல்லா ஏழைகளுக்கும் சோறுபோட முடி யாவிட்டாலும் முடிந்தவரை ஏழைகளுக்கு உதவலாம்.

● அந்தக் காலத்தில் வான ளாவிய கோயில்களேயும், அவற் றின் நிர்வாகத்துக்கென்று சொத் துக்களேயும் ஒதுக்கிய காலத்தில் கூட வறுமை தமிழகத்தில் இருந் ததாக எந்தச் சரித்திரமும் கூற வில்லே. வறுமை இருந்திருந்தால் கோவில்களும் மடங்களும் உண் டாகி இருக்காது.

● இந்தக் காலத்தில் நமக்குச் சம்பாதிக்கவும் திறமை இல்லே. தருமம் செய்யவும் மனமில்லே. இருக்கின்ற சேமிப்புத் தொகையைக் கொண்டு வாழவும், முன்னேர் செய்த திருப்பணிகளேக் குறைகூற வும்தான் கற்றுக்கொண்டோம்

● திருந்தலங்களில் கோயி லுக்குள் சென்று மூர்த்தியைத் தரி சித்தால்தான் புண்ணியம்கிடைக் கும். ஆனுல் பழநி, சிதம்பரம் முதலிய திருத்தலங்கள் தொலே விலிருந்து ஊரைத் தரிசித்தாலே புண்ணியம் கிடைக்கும்.

3738
திருவருட்பிரகாச வள்ளலார்
எழுதிய
திருவருட்பாவில்
**அருள்**
என்ற பதம் 3738 முறை
வந்துள்ளது

● ஸ்ரீலஸ்ரீ அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள், 28 ஆண்டுகளில் 533 அறக்கட்டளைகளை ஒரு கோடி எட்டு லட்சரூபாய் அளவில் நிரந்தரமாக நடைபெறும் வகையில் செய்து அருளியிருக்கிருர்கள். இதுவரை எந்த மடாதிபதியும் இவ்வளவு அதிகமாக அறக்கட்டளைகள் நிறுவியது இல்லை.

● திருப்பனந்தாள் காசிமடத்து அதிபர் ஸ்ரீ அருள் நந்தித் தம்பிரான் சுவாமிகள் அண்மையில் காசியில் பரிபூரணம் எய்திஞர்கள். அவர்களுக்குப் பிறகு 21 வது பட்டமாக ஆட்சி ஏற்றிருப்பவர் ஸ்ரீலஸ்ரீ முத்துக் குமார சுவாமித் தம்பிரான் ஆவார்.

● குருபக்தி வேண்டும். ஈச்வர பக்தி வேண்டுமென்று நம் சாஸ்திரங்கள் சொல்கின்றன. உலகம் க்ஷேமமாக இருக்க குரு பக்தி, ஈச்வர பக்தி இவை இரண்டும் அழிந்து போகாமல் இருந்தால் அதுவே போதும்.

● உருத்தி ராட்சத்தில் ஒரு முகமணி முதல் பதினறு முகமணி வரை உண்டு. கழுத்தில் முப்பத்தி இரண்டு மணிகளை ஒருங்கு சேர்த்து மாலையாக அணிவது நல்லது. மார்பில் நூற்றெட்டுப் பொடி மணிகளை மாலையாகக் கோத்து ஜபத்திற்கும் பயன்படும் படி தரித்துக் கொள்ளலாம்.

● பால், பஞ்சாமிர்தம், வடித்தெடுத்த நீர், இளநீர், வாசனை திரவியங்கள் கலந்த நீர், பன்னீர், எண்ணெய், விபூதி, சந்தனம், களபம், புஷ்பம் முதலியவை அபிஷேகப் பொருள்களாகும்.

● படித்தவர்கள் மிக அதிகமாகிவிட்ட இந்தக் காலத்தில் நல்லவர்கள் மிகக் குறைவாக இருக்கிருர்கள். நல்ல தன்மையில்லாத கடவுள் பக்தி இல்லாத அறிவாளிகளினுல் தொல்லைகளே அதிகம் ஏற்படுகிறது.

● நாம் கடவுளை உள்ளன்போடு வணங்க வேண்டும். கைமாறு கருதி கடவுளை வணங்கினுல் அது வியாபார மாகிவிடும். தண்டனைக்கு அஞ்சி கடவுளை வணங்கினுல் அது அடிமைப்புத்தியாகும்.

● உயிர்கள் எல்லாவற்றையும் சமமாகக் கருதி அவற்றிடையே இரக்கவுணர்வும் தயவும் காட்டத் தக்க ஜீவகாருண்ய ஒழுக்கத்தை மக்களுக்குப் போதிக்க வேண்டும் என்பது வள்ளலார் வலியுறுத்திய கொள்கைகளில் ஒன்று.

● மனிதன் சாவாத வாழ்வைப் பெற மூன்று மகா மந்திரங்களைப் போதித்தார் வள்ளலார். அவை பசித்திரு, தனித்திரு, விழித்திரு என்பனவாகும்.

● வள்ளலார் ஆவியோடியைந்த யாக்கையுடன் மறைந்த

அந்தப் புனித நேரம் 1874 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 30 ம் நாள் வெள்ளிக்கிழமை, நள்ளிரவு 12 - மணியாகும்.

● மயிலாப்பூரிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ணமடம் 1897 ஆம் ஆண்டில் விவேகானந்த அடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவரது சகோதர சீடரான ஸ்ரீ ராமாகிருஷ்ணனந்தரால் நிறுவப் பெற்றது. அண்மையில் எழுபத்தி ஐந்தாம் ஆண்டு நிறைவு விழா வெகு சிறப்பாக கொண்டாடப் பட்டது.

● வள்ளலார் தம் கடைசிக் காலத்தில் வெறும் தூதுளங் கீரையை மட்டும் ஆகாரமாகக் கொண்டிருந்தார். பிறகு அதனை நிறுத்தி, சுத்த ஜலம் மட்டும் சாப் பிட்டார். பிறகு அதனையும் நிறுத்திவிட்டு, தேன் மட்டும் அருந்தித் தமது சரீரத்தை வன்மையற்றதாகச் செய்து வைத் திருந்தார்.

● ஒழுங்கீனம் என்பது சமுதாயத்தைப் பிடித்துள்ள பொது வியாதி. அது அடிகளாருடைய அன்பர்களிடத்தும் கொஞ்சம் பரவியது. ராமலிங்க வள்ளலார் மனம் நொந்து, சத்தியஞான சபையையே பூட்டிவிடச் செய் தார்.

○ கீதை — என் அன்னை. இப் படிச் சொன்னவர் மகாத்மா காந்திஜி அவர்கள்.

● வாயில்லாச் சீவன்களைத் தேவதைகளுக்குப் பிரார்த்தனை செய்து ஆலயத்தின் முன் வெட்டு வது இந்துமத தர்மமல்ல.

● முன் காலத்தில் அதிகாலை யில் எழுந்தவுடன் மனைவி கண வன் காலைத் தொட்டுக் கும்பிடு வார்கள். இப்போது காலைத் தொட்டுக் கும்பிட வேண்டாம். கணவன் வரும்போது நீட்டிய காலை மடக்கினாலே போதும்.

● மோட்டார் ட்யூப்பில் சிறு துவாரம் இருந்தாலும் காற்று உள்ளே தங்காது. இந்த உடம்புக் குள் ஒன்பது துவாரங்கள் இருந் தும், காற்று உள்ளே தங்கி இருப்பது ஆச்சரியமல்லவா? அப்படித் தங்கச்செய்தவர் யார்?

● மகாத்மா காந்தி எவ்வள வோ துன்பம் அடைந்து நமக்குச் சுதந்திரம் வாங்கித் தந்தார். ஆனால் அவர் பலன் கருதவில்லை; அதுதான் நிஷ்காமியதவம். நமது சேவையும் பிரார்த்தனையும் பிற ருக்காகவே இருக்கவேண்டும்.

● சுருக்கெழுத்தும் ரேகையும் படித்தவனுக்குத்தான் தெரியும். மற்றவனுக்குக் கோடாகத்தான் தெரியும். அதுபோல கோயிலில் இருக்கும் விக்கிரகம் பக்தியுடை யவனுக்குத் தெய்வமாகத் தெரி யும். மற்றவனுக்குக் கல்லாகத் தான் தெரியும்.

● கடவுள் கண்ணுக்குத் தெரியவில்லை, ஆகவே கடவுள்

இல்லை என்றால், உயிர் கண்ணுக் தெரியவில்லை, ஆகவே உடலில் உயிர் இல்லை என்று சொல்வதா?

● தியானம் முறையோடு ஒழுங்காகச் செய்தால் முகத்தில் தேஜஸ் உண்டாகும். குரலில் இனிமையும் கண்களில் ஒளியும் உண்டாகும்.

● கொசுவுக்கு ஆயுள் 21 மணி நேரம். அது, மகாத்மா காந்தி 79 ஆண்டு வாழ்ந்தார் என்பதை நம்புமா? அது போல் வீங்கியும், புழுத்தும், நாற்றமெடுத்தும் சாகிறவன் ஜோதி ராமலிங்க அடிகள் சரீரத்தோடு ஜோதியில் மறைந்தாரென்பதை நம்புவானா?

● ஊசிமூலம் மருந்து செலுத்துவது சிரமமில்லாதிருத்தல் போல், கதை ரூபத்தில் நீதிகளைச் சொன்னால் மக்கள் மனத்தில் நன்றாகப் பதியும்.

● பன்னிரண்டு மாதத்தில் மாமிசம் உண்ணாத மாதம் புரட்டாசி மாதம். ஆகவே தான் அந்த மாதத்தில் ஜோதி ராமலிங்க சுவாமிகள் அவதரித்தார். காந்தியடிகள் தோன்றினார்.

● அணுகுண்டு போட்ட விடத்தில் நாற்பது ஆண்டுகளுக்குப் புல் முளைக்காது. பொறாமைக்காரன் இருந்தவிடத்தில் நானூறு ஆண்டுகளுக்கு எதுவும் முளைக்காது. அணுகுண்டைவிடப் பொறாமையானது மக்களை அழிக்கும்.

● சிறிய பாடசாலைக்கு ஓர் ஆசிரியர். உயர்நிலைப் பள்ளிக்குப் பல ஆசிரியர்கள். அதுபோல், மற்ற மதத்திற்கெல்லாம் ஒரே குருநாதர். நம்முடைய மதத்துக்குப் பல குருநாதர்.

● அரிசியின் ரூபம் தெரிய ஒட்டாமல் உமி மூடி இருக்கிறது. உமியை நீக்கினால் அரிசியைப் பார்க்கலாம். அதுபோல் கடவுள் சொரூபத்தைக் காண ஒட்டாமல் ஆசாபாசம் மூடி இருக்கிறது. ஆசாபாசத்தை நீக்கினால் கடவுளைக் காணலாம்.

● தருமத்தையும், தவத்தையும் வளர்க்காமல் உடம்பையே வளர்த்துக் கொண்டு இருந்தால், நாளை பிணம் சுமப்பவன் திட்டுவான்.

● செல்வம் இருந்தால் மட்டும் போதாது. அதை அனுபவிக்கப் புண்ணியம் வேண்டும். சர்க்கரை வியாதி இருந்தால் செல்வம் இருந்து என்ன பலன்? ஆகவே ஆபத்து, துன்பம் வராமலிருக்கத் தருமம் செய்.

● ராஜபாளையம் நாய் என்றால் தமிழ்நாடு முழுவதும் தெரியும். காங்கேயம் மாடு என்றால் டில்லிவரையும் தெரியும். நீ அடுத்த தெருவில் உள்ளவர்களுக்குக் கூடத் தெரியாமல் வாழ்கிறாய். புகழோடு வாழ வேண்டாமா?

● தூங்குகிறவன் வாயிலே தேனைவிட்டாலும், விட்டவனை அடித்துவிடுவான். விழித்த பிறகு தான் தேனின் இனிப்பை தெரிந்து இன்னும் சிறிது தேன் விடு, என்று கூறுவான். அது போல, ஞானமில்லாதவனுக்குக் கடவுளைப் பற்றிய சொல் கசக்கும். அருள் அறிவு வந்தால்தான் அதன் இனிப்புத் தெரியும்.

● தேவாரம் முதலிய அருட்பாடல்களை ஓதுகின்றவர்களையும் சிவபுராணங்களை உபந்யாசம் செய்கின்றவர்களையும் மதித்துப் போற்றி அவர்களுக்கு இயன்ற உதவி செய்ய வேண்டும்.

● அந்தணர்களுக்கும், அடியவர்கட்கும், முக்கியமான நாட்களிலேனும் அன்னமிட்டு ஆடை முதலியன அளித்து உபசரித்தல் பிறவி எடுத்ததின் பயனாகும்.

● மதுரைக் கோயிலில் அன்னை மீனாட்சிக்கே முதலில் வழிபாடு நடைபெறுகிறது. எனவே கோயிலுக்குச் செல்பவர்கள் கிழக்கு வீதியிலமைந்த அம்மன் சன்னிதி வாயில் வழியாக உள்ளே செல்லுவது வழக்கம்.

● அபிராமி அந்தாதி அருளிய ஸ்ரீ அபிராமிபட்டர், அந்தணர் குலத்தில் இன்றைக்கு ஏறத்தாழ முன்னூறு ஆண்டுகட்கு முன்பு திருக்கடவூர் என்ற ஊரில் தோன்றினர். இவர் சக்தி பூஜையும் யோக நெறியும் செவ்வனே பயின்று வந்தார்.

# ஆத்மஞானம்

## ஸ்ரீ சுவாமி சிவானந்தா

ஆத்மஞானம் ஒன்றே தான் வாழ்க்கையின் இன்னல்களையும் துங்கங்களையும் கேடுகளையும் பூண்டோடு ஒழிக்கவல்லது. எனவே தூய்மை,வைராக்கியம். விவேகம், "நான் யார்?" என்ற விசாரணை, ஆத்மதியானம், மன அடக்கம், இந்திரிய நிக்ரஹம், முதலிய நெறிகளின் மூலம் இந்த ஒப்பற்ற, மேலாம், ஆத்ம ஞானத்தைப் பெறு.

முக்தியை அடைவதற்கு ஆத்மஞானம் இன்றியமையாதது. ஆத்மஞானத்தை சுவானுபூதியில் அறியவேண்டுமேயொழியவெறும் சாஸ்திர ஞானத்தால் மட்டும் முடியாது.

சாதன சதுஷ்டயங்களினுலும் அநேக ஜன்மங்களில் செய்துள்ள பற்றற்ற சேவையினுலும் பண்பட்டுப் பரிசுத்தமடைந்த மனத்தில் தான் ஆத்மஞானம் சித்திக்கும்.

ஆத்மஞானம் என்ற ஓடத்தின் மூலம் சம்சார வாழ்க்கையாகிய சமுத்திரத்தைக் கடந்து பயமின்மையையும் பரமசாந்தியையும் அமரத்வத்தையும்அளிக்கும்ஸ்தானத்தை அடை.

ஆத்மஞானம் ஏற்பட்டால் உனது வாழ்க்கையின் திருஷ்டி தெளிவுறும். விசாலமாகும். ஆழம் பாய்ந்து நிற்கும். அன்றியும் உனது ஆத்மனேதான் யாவர் உள்ளிலும் இருப்பதையும் உணர்வாய்.

பிரம்மம் மாயையில் பிரிதிம்பித்து உலகம்போல் தோன்றுகிறது. இதனுல் முக்குண மயமான உலகத்திற்கேதான் நலம், கேடு ஏற்படுகிறதேயொழிய நிர்குண-நிர்விகார பிரம்மனுக்கு ஒரு வித விகாரமும் ஏற்படுவதில்லை.

கயிற்றின்மீது பாம்புஆரோபிக்கப்படினும் கயிறு கயிருகவே இருப்பதேயல்லாது பாம்பாக மாறுவதில்லை. அதுபோன்று விபரீத பாவனையால் நாமரூபமான ஜகத்தை பிரம்மன்மீது ஆரோபித்தாலும் பிரம்மன் நிர்விகாரியாய் இருப்பதேயல்லாது விகாரப் படுவதில்லை, ஜகத்தாக மாறுவதுமில்லை.

தங்கம் இல்லாது தங்க ஆபரணத்திற்குத் தனி இருக்கை கிடையாது. அதுபோன்று பிரம்மம்

இன்றி உலகத்திற்கும் தனி இருக்கை கிடையாது.

ஒரே ஒரு வஸ்துவுக்குத்தான் இருக்கை உண்டு. அதுதான் நிலைபேறுள்ள வஸ்து. அதுதான் முழு முதற் பொருள், பரமாத்மன், ஆத்மசைதன்யம். அதுதான் அண்ட சராசரங்கள் அனைத்தையும் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள மூல வஸ்து. அதுதான் சலனப் பொருள்கள் அனைத்திற்கும் அதிஷ்டானமாகச் சலனமற்று நிலைத்து நிற்பது. அதுதான் நாம ரூபங்களுக்கு எல்லா அதிஷ்டானமாக உள்ளது. அதுதான் எல்லா இயக்கங்களுக்கும் தோற்றங்களுக்கும் ஆதாரமாக உள்ளது.

நாம ரூபங்களுக்கு எல்லாம் அதிஷ்டானமா இருப்பது சுத்த சைதன்ய வஸ்துவாகிய பரமாத்மனே. இதுவே யாண்டும் யாவற்றிலும் ஊடுருவி நிற்கும் பரம் பொருளும் ஆகும். இதுவே மாறுதல்களுக்கு இடையே மாறுது நிலைத்து நிற்கும் பரமாத்மனும் ஆகும். இதுவே மூலவஸ்து அல்லது முழுமுதற் பொருள் அல்லது சத்தியப் பொருள் அல்லது சத் அல்லது சத்தையுமாகும்.

ஆசைகள் அறுபட்டால் இப் பிறவியிலேயே உனக்கு அமரத்வம் கிட்டும், பிரமனுடன் ஐக்கியமும் ஏற்படும்.

மாயையின்உபாதியால் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் வேறுபாடுஇருப்பதுபோல் தோன்றுகிறது. வாஸ்தவத்தில் அவ்வாறு அல்ல. உண்மையில் ஜீவன் சச்சிதானந்த பிரம்மமே.

ஆத்மனை சுவானுபூதியில் அறிந்தால் ஆத்மீக வாழ்க்கையின் இலக்ஷியம் பூர்த்தியானதாகும்.

வேதமாவது குருவாவது பிரமனை நேரில் காட்டமுடியாது. வழியைத்தான் காட்டமுடியும். அதற்குமேல் நீயேதான் சொந்த முயற்சியைக் கொண்டு பாடுபட்டாகவேண்டும். நீயேதான் நெறியான வாழ்க்கையை மேற்கொண்டு மனதைப் பரிசுத்தமாக வைத்துக் கொள்ளவேண்டும்.

பரிசுத்த மனத்திலேதான் திவ்விய அருள் வீசும். பரிசுத்த மனமேதான் ஞானக் கண்ணுகவும் மாறுகின்றது. அதுவேதான் உள்ளுணர்வு என்றும் கூறப்படுகின்றது. இந்த உள்ளுணர்வின் மூலமேதான் பரம்பொருளை நேரில் காணமுடியும். எனவே உள்ளுணர்வைப்பெற முயற்சிசெய்.

சுத்த சைதன்ய வஸ்துவாகிய பரப்பிரம்மத்தின்மீது நாமரூபமாகிய ஜகத் ஆரோபிக்கப்படினும் பிரம்மம் பாதிக்கப்படுவதில்லை. சினிமாத் திரையின் மீது படங்கள்தான் தோன்றி மறைகின்றதேயொழிய திரை மறையாது நிலைத்தே நிற்கின்றது. அதுபோன்று சிதாகாசமாகிய பிரம்மத்தின்மீது ஜகத்தான்உண்டாகி மறைகின்றதேயொழிய பிரம்மம் மறையாது தனித்து நிலைத்தே நிற்கின்றது.

● ஸ்ரீ ரங்கம் ஸ்ரீமந் ஆண்டவன் ஸ்வாமிகள் கடந்த பத்து ஆண்டுகளில் பாதயாத்திரையாய் சுமார் 17,000 மைல்கள் சஞ்சாரம் செய்து அண்மையில் சென்னை நகருக்கு எழுந்தருளி உள்ளார்கள்.

● சமீபத்தில் காளஹஸ்தி கோவிலில், ஆந்திர அறநிலைய பாதுகாப்பு கமிஷனர் கே. வாசுதேவராவ், சைவ ஆகமபாடசாலையைத் துவக்கி வைத்தார். ஆந்திர கோவில் திருப்பணிக்காக 40 லட்சம் ரூபாய் செலவிடப்படும் என்று அப்போது அவர் சொன்னார்.

● இந்துமதத்தில் இருசிறப்பு அம்சங்கள் இருக்கின்றன. ஒன்று நெற்றியில் குறியிட்டுக் கொள்வது. இரண்டு இறந்த பிறகு எரிப்பது. பிற மதங்களில் இவ்வழக்கம் காணப்படவில்லை.

● தட்சிணாமூர்த்தி எல்லா மூர்த்திகளைக் காட்டிலும் சாந்தமான மூர்த்தி. பைரவர் உக்கிரமான மூர்த்தி. நடராஜா ஆனந்த மூர்த்தி. பிட்சாடனர் மிகவும் வசீகரமான மூர்த்தி. சோமஸ்கந்தர் கருணை நிரம்பிய மூர்த்தி.

● சிவாலயங்களில் இரண்டாவது பிரகாரத்தில் ஈசான்ய மூலையில் நவக்கிரகங்களின் ஆலயம் காணப்படும். சூரியன் சந்திரன், அங்காரகன், புதன், பிரகஸ்பதி, சுக்கிரன்,சனி, ராகு, கேது என்பவர்களே நவக்கிரகங்கள் ஆவர்.

● ஞான பீடமாய் விளங்குகிற தருமையாதீனத்தை நானூறு ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ குரு ஞான சம்பந்தர் தோற்றுவித்தார். அதுமுதற் கொண்டு சைவத்தையும், தமிழையும் இரு கண்களாகப் போற்றி வருகிறது தருமையாதீனம்.

● முன் காலத்தில் விருந்தினர்கள் வந்தால் கோயிலுக்கு அழைத்துச் செல்வார்கள். ஆனால் இப்போது ஓட்டலுக்கும், சினிமாவுக்கும் அழைத்துச் செல்கிறார்கள்.

● வள்ளலார் நடக்கிற காலங்களில் அடிச் சுவடுகள் தோன்றா. நடக்கும்போது குறுக்கேஉள்ள சப்பாத்தி முள்ளின் மீது சாதாரணமாய் நடந்துசெல்வார், நடக்கும்போது நிழல் தெரியாது.

● வடலூரில் உள்ள சத்திய ஞானசபையில் ஏழுதிரைகள் உள்ளன. கருப்புத்திரை, நீலத்திரை, பச்சைத்திரை, சிவப்புத்திரை, பொன்மைத்திரை, வெண்மைத்திரை, கலப்புத்திரை என்பனவாகும்.

● ஆலயப் பிரகாரங்கள், கோபுரங்கள், மதிற்சுவர்கள் முதலியவற்றில் உள்ள புல் பூண்டுகளை உழவாரம் கொண்டு அகற்றலாம்.

# தெய்வீக வாழ்வு



ஸ்ரீ சுவாமி சிதானந்தா

தன்னலமறுப்பும், சேவையும், பக்தியும், பிரார்த்தனையும், புறப் பொருள்களினின்று மனத்தினை ஆமைபோன்று இழுத்துக்கொள்ளல், அதனை மீண்டும் ஒருமுனைப் படுத்தி தியானித்தல் ஆகியவை நிறைந்த வழியே தெய்வீக வழியாகும்.

மேலும் அவ்வழி உள்முக ஆன்மீக மலர்ச்சிக்கும், வளர்ச்சிக்கும், பொலிவுக்கும் அடிகோலுகின்றது. இடையருத விசாரணைக்கான வழியாகவும் அது மிளிர்கின்றது. "நான் யார்?" "நான் என்ன?" பின்வருமாறு உறுதிப்படுத்துவதற்கான வழியாகவும் அது விளங்குகின்றது.

"நான் இந்த உடலல்ல, நான் இந்த மனமுமல்ல, நான் இந்த அறிவுமல்ல [உணர்வு]. நான் அந்த அந்தரங்க ஆத்மா, மேலாம் பரம்பொருள், நாமமற்ற, உருவமற்ற, பிறப்பற்ற, அழிவற்ற, மரணமற்ற அழியா அமர ஆத்மன், நான் அதுவே, அதுவே நான் - ஸத்சித் ஆனந்த சுந்தரவடிவினன் நான்."

உண்மை, தூய்மை, நன்மை, எளிமை, பணிவுத் தன்மை, நன்னடத்தை, ஒழுக்க சீலம், தன்னடக்கம், ஆசைகளினின்று விடுதலைப் பெறுதல் ஆகிய இனிமைப் பண்புகள் தோய்ந்ததோர் வாழ்வே ஆன்மீக வாழ்வு.

அத்தகு வாழ்வு அனைத்து செயல்களுக்கும், நன்றி உணர்வுடன் ஆற்றப்பட்ட கடமைகளுக்கும் இடையே ஆண்டவன் ஒருவனை ஒரே இறுதிக் குறிக்கோளாக ஏற்றுக்கொண்டுள்ளது. இம் மகத்தான குறிக்கோளினை என்றும் மனதில் இறுத்தி, இடையரு அன்புடனும், நம்பிக்கையுடனும் இறைவனை நினைத்தல் வேண்டும்.

அனைத்துப் பொருள்களிலும் அவன் தரிசனத்தைக் காண வேண்டும், அனைத்துச் செயல்களையும் பிரார்த்தனை உணர்வில் ஆற்ற வேண்டும். தன்னல மறுப்பும், சேவையும், பக்தியும், தொழுகையும், ஒருமுனைப்பும், தியானமும், இடையரு ஆத்மீக விசாரணை ஆகியவற்றின் மூலம் வளர்ச்சியும், முதிர்ச்சியும் பெற்றுத் தெய்வீக அனுபவமும் மெய்யுணர்வும் கொண்ட இறையுணர்வின் பேரின்பப் பெருநிலையினை அடைதல் வேண்டும்.

அந்நிலே உனக்குக் கீழ்க்கண்ட அனுபவத்தையும், உணர்வையும் அளிக்கும். நான் நிகரற்ற பரம் பொருள். நான் ஸத் - சித் - ஆத் மன். நான் நிலேபொருள். நிறை பொருள், எங்கும் உள்ள பொருள். எங்கும் உறைபொருள், நான் முன் பொருள், முழுப்பொருளும் நானே. வல்ல பொருளும் நல்ல பொருளும் நானே. எனக்கு முது மையில்லே. எனக்கு முடிவு இல்லே. எனக்குத் துன்பமில்லே, துக்க மில்லே, இன்பமே எந்நாளும். நான் என்றும் அழியா அமரன், ஆனந்தப் பொருளும் அமைதிப் பொருளும் நானே, அழகுப் பொருளும், அறிவுப் பொருளும் நானே.

அனேத்துப் பொருள்கள் மீதும் வெண்சங்கு ஊதி வெற்றிக் கொடி நாட்டும் அத்தகு அனு பவமே மகத்தான, இறுதியான உறுதியான தெய்வீக வெற்றி யாகும். அதனேப்பெறும் ஒரு வன் "ஆனந்தோஹம், ஆனந் தோஹம், பிரம்மானந்தோஹம் —நானே ஆனந்தம், நானே பேரானந்தம், நானே தனிப் பிரம்மானந்தம்" எனும் சிங்க நாதம் முழங்க பேரானந்தப் பெருங்கடலிலும் வியப்புக்கடலி லும் நிலே குலேயாது நின்று கால் மாறி களிகூத்தாடுவான், ஆனந் தத் தாண்டவம் புரிவான்.

இப்பெறற்கரிய பேற்றினே யடையும் ஒருவன் சந்தர்ப்பங்கள், சூழ்நிலேகள், இருமை உணர்வுகள் ஆகிய அனேததையும் தனித்து நின்று எதிர்த்து முறியடித்து வெற்றிப் புகழ்மாலே சூடும் நிக ரற்றதோர் ஆன்மீக வீரனுகத் திகழ்வான்.

விழிப்புகொள்! எழுந்திரு! வா! உழைப்புகொள்! ஆமமகத் தான அனுபவத்தினே நோக்கி நடைபோடு! உன்னுள்ளே இருக் கும் நெஞ்சத் தாமரையினே மல ரச் செய்ய அவசியமானவைகள் அனேத்தையும் செய்.

தெய்வீக அனுபவம் எனும் மலராத மொட்டிற்கு ஆதார மாயுள்ள வித்து மேன்மேலும் தளிர்த்துத் தழைத்துக் கிளேத்து வாழ்வு பெற்றுத் தெய்வீக அனு பவ மரமாக வளர்ந்தோங்கட் டும். அதன் பொருட்டு நீ உழைத்தல் வேண்டும்.

இவ்வுணர்வு ஏற்கனவே உன் னுள் இருக்கின்றது. அது அங்கே பொதிந்துள்ளது. பூட்டப் பெற் றுள்ள பேழைக்குள் ஒப்பிலா அழகுக் காட்சியுடன் விளங்கும் விலேமதிக்கவொண்ணு ஒரு வைரக்கல் போன்று அது உள் ளது.

அதற்கான திறவுகோல் கிடைக்கப்படவில்லே. அவ்வைரத் தினேப் பெற நீ அப்பெட்டியினேத் திறக்க வேண்டியிருக்கின்றது.

அதே போன்று பரிபூரணத் துவம் பெற்ற அமரத்துவம் உன் னுள்ளே இயக்கமற்ற உறக்க நிலே யில் உள்ளது. நீ ஏற்கெனவே அதுவாக இருக்கின்ருய். நான் பேசுவதாக நீ அதனேக் கேட்ப தாக இருப்பினும், நீ நிலேயான அறிவு மயமான, ஆனந்தமய மான தனிப்பெரும் பொருள்.

நீ என்றும் அழியா ஆத்மன். நீ ஸத்-சித் அனந்த உணர்வு வடி வினன் ஜோதிச் சொருபன். சுந்தர வடிவினன். இதுவே உனது உண்மை உணர்வு. இது தான் தெய்வீக வாழ்வு.

# அருள் வாக்கு



மௌனஸ்வாமிஜீ
அம்பத்தூர்

எப்பொழுதும் வாஸுதேவனையே தியானித்துக்கொண்டு இருப்பவர்களுடைய புத்தியில் ஆசைகள் பற்ரு.

இந்திரியங்கள் மனதில் ஒடுங்குகின்றன. மனம் ஜோதியில் ஒடுங்குகிறது. ஜோதிக்குள்ளே இந்த மனமே ஜீவனுகயிருப்பதை காணலாம். இந்த மனசுக்கும் ஜீவனுக்குள்ள தன்மை ஒன்றே! இருந்தாலும், இதன் நடுவில் பல விஷயங்களால் மறைத்துக் கொண்டு தன்னை மறைக்கச் செய்யும் ஒரு சக்தி இருக்கிறது. அதுதான் மாயை எனப்படுவது. இந்திரியங்களை ஒருமுகப்படுத்தி மனதை ஜோதிக்குள்ளே அடைத்து, ஸச்சிதானந்த அமுதில்கரைத்து விடுவதுதான் பிரமமாநந்தம். அதுவே மஹாமௌனம். ப்ரம்மஸ்வருப ஸாக்ஷாத்காரமும் திவ்ய தரிசனமும் அதுவேயாகும்.

உபநிஷத்துக்கள் முறையிடுகிற பொருள் ஒன்றே! அதுதான் அகண்டாகார சைதன்ய வஸ்து! எது எந்த மூர்த்தியைப் போற்றுகிறதினுலும் சைதன்ய வஸ்துவை காட்டியே பேசும். இந்த அந்தரங்க உண்மையை உணர்ந்து கொண்டு உபனிஷத்துக்களை பாராயணம் செய்வதினுல் மட்டுமே ஆத்மாநந்தம் சித்திக்கும்.

எது நிச்சயிக்கிறதோ அதுவே புத்தி! நிச்சயிக்கிறதான உள்ளத்திற்கு சைதன்யம்! அது ஜீவன். அதனுள் நுழைந்து ஆனந்திக்கும் போது இந்திரியங்கள் யாவும் ஒன்றுபட்டுக்கிடக்கும்.

ஜிலேபி என்று சுலபமாகச் சொல்லி விடலாம்! ஆனுல்,

உளுத்தம்பருப்பை ஊறவைத்து அரைத்து, நெய்யில் பிழிந்து வேக வைத்து மறுபடியும் சர்க்கரைப் பாகில் ஊறினால்தான், ஜிலேபி யைக் காணலாம்! அதுபோல, பிரம்மஞானி என்று சுலபமாக சொல்லிவிடலாம்! ஆனால், அதற்கு வேண்டிய மனத்தை ஆனந்த நீரில் ஊற வைத்து, இந்திரிய கோசங்களை அடக்கி, யோகாக்நியில் இட்டு நிர்மல ஸாகரத்தில் ஒருதரமாவது மூழ்கினால்தான் அவரை பிரம்மஞானி யென்று சொல்லலாம்.

நான் என் இளம் பருவத்தில் விளையாடிக் கொண்டிருந்த பொழுது ஒருவர் என்னிடம் வந்து, "தம்பி, நீ வெள்ளானைப் பார்த்திருககிறாயா?" என்றார். "பார்க்கவில்லையே. மாமா, வெள்ளானை என்கிறது உண்டா?" என்றேன். "உண்டு; கண்டிப்பாகப் பார்க்கலாம்" என்றார். இதைக் கேட்டதும் வெள்ளானையைப் பார்ப்பதிலேயே அவா உண்டாகி, "வெள்ளானை! வெள்ளானை! அதைப் பார்க்கலாமே! வெள்ளானை!" என்று உரைத்த வண்ணமாகவே சில நாள் இருந்தேன்.

ஒரு நாள் ஒரு கனவு கண்டேன். பிராமணர் ஒருவர் வந்து என்னைத் தோள்மேலேற்றி ஆகாய மார்க்கமாகப் பறந்து செல்வதுபோலவே இருந்தது. அப்பொழுது நான் கண்ட வைபவங்களை என்னவென்று சொல்வேன்? ஆனால் எனக்கு வெள்ளானையைப் பார்க்க வேண்டும் என்ற நினைவே இருந்ததினால், அவைகளில் நான் விருப்பம் கொள்ளவில்லை. சிறிது உயரம் செல்லவே, கீழே பரந்த உலகைப் பார்க்கும் பொழுது, அது ஒரு எட்டுக்கால் பூச்சியைப் போலத் தென்பட்டது. இன்னும் மேல் நோக்கிச் சென்றதும், கணக்கில்லாத நக்ஷத்திரங்களையும் சந்திரிகையையும், விரித்த தாமரை மலரின் நடுவில் முகமுடைய சூரியர்களையும் கண்டேன். அதற்குமேல் செல்லவே, ஒரு வெள்ளானை ஆங்காரத்தோடு நிற்பதைக் கண்டேன். அதனருகில் தேஜஸுடன் விளங்கும் இரண்டு பெண்மணிகளையும் கண்டு, தோளிலிருந்து இறங்கி, தேவிமார்கள் ஸமேதராக ஐராவததேவனை ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன். இன்னொரு தரம் நன்றாக வெள்ளானையைப் பார்க்கக் கண்களை விழித்ததும், ஒன்றுமில்லை! இந்த கனவு கண்டதிலிருந்து, எல்லா உலகங்களும் ஸித்தர்களும் தேவர்களும் முக்தர்களும், ப்ரத்தியக்ஷமாகக் காணக் கூடியவைகளே; பக்தியும் நம்பிக்கையும் இருக்கவேண்டியது முக்கியம்!" என்பதையும், கீழ்க்கண்ட உலகமெல்லாம் போக்குவரவு உடையவை என்பதையும் அவற்றில் பற்றுதலை அடையாமலிருப்பதால் ஐராவத தேவனைக் காண முடியும் என்பதையும் இப்பொழுது என் அனுஷ்டான பூர்வமாக உணர்ந்தேன்.

ஐராவத தரிசனம் கண்ட கனவை நினைக்கும் போது கீழ்க் கண்ட உலகமெல்லாம் அநித் தியமே என்னும், ஸ்ரீ ஐராவத தேவனை அடைய வேண்டுமானால் வெறுப்பு விருப்பான இரண்டு தேவிகளை ஜெயிக்கவேண்டு மென்றும் சொல்வது போலவே, (சொன்னால் விளங்காத சிறு பையனான எனக்கு) கருணை யினாலே பகவானே வந்து காட்சி யினால் அறியும்படி செய்தருளி மறைந்தார் என்றே என் அனு பவமாக அறிந்தேன்.

குருடனுடைய பத்தினி எவ்வ ளவு அழகாயிருந்தாலும் அவனால் பார்க்கமுடியாது! அதுபோல அஞ் ஞானத்தால் மூடியவனுடைய கண்ணுக்கு திவ்ய தேஜஸ் தோன் றுது.

ஒரு சோம்பேறியிடமிருந்து அறிவுடையவன்ஒருவன்ஏதேனும் ஒரு பொருளை எடுத்துக்கொண் டானாயின், அறிவாளியே சோம் பேறியிடம் வந்து மன்னிப்புக்கேட் பது ஸஹஜம்! இதுபோல உலகத் தில் உழலும் சோம்பேறிகளுக்குக் காரணமாக காமக் குரோதாதி களிடமே நம் பூர்வீக அறிவைக் கொண்டு மன்னிப்புக் கேட்க வேண்டும். ஏனெனில், இந்தக் காமக் குரோதாதிகளால் அடைந்த இச்சரீரம் வந்தபோது தான் அதற்கும் அப்புறமுள்ள ஓர் அறிவைக் காணக் கிடைக்கிறதல் லவா? அதற்காக அவைகளைச் சாந்தப்படுத்தி மெல்ல மெல்ல சோம்பேறித்தனத்தை விட்டு, தெளிந்தஅறிவுடன் இருக்கவேண் டும்.

தரிசனத்தால் சிந்தனை உண்டா கிறது; சிந்தனையால் மனமடங்கு கிறது; மனமடங்கி நிற்கும்போது பரமாத்மா சோபிக்கிறது. ஈஸ் வர தரிசனத்தாலே மனம்அடங்கி, ஞானவுருவமாகி சோபித்து, எங் கும் பரமாத்மாவின் செயலைக் காண்கிறது.

நேரத்தை அறியுஞ் சக்தியைப் பயன் படுத்தாதவர் கையில் சிறு கடிகாரத்தைக் கட்டிக்கொள்வர். அதுபோல, தன்னிடமுள்ள பாவ புண்ணியத்தின் கணக்கை அறியச் சக்தியிருந்தும் அறியாதிருப்பவர் களும் உண்டு!



# அப்பர் தேவாரத்தில் திருநீறு

சிவஸ்ரீ தத்புருஷதேசிகர் தேவகோட்டை

பரம் பொருளாகிய சிவ்பெருமான் மெய்யடியார்களே உய்யக் கொள்ளுதற்காகத் தமதுசதாசிவ மூர்த்தத்திலிருந்து வெளிப்படுமாறுசெய்தருளிய வேத சிவாகமங்களோடு ஒப்பத், தேவார திருவாசக முதலிய அருள் நூல்களேப் பதி வாக்கென்றே கொண்டு நமது சைவ பாரம்பரியம் தொன்று தொட்டுப் போற்றி வருகின்றது. சிவகரணங்களுள் தமது பசு கரணங்கள் அடங்கத் தமக்கெனச் செயலும், தாமும் அற்ற நிலேயில் நமது அருளாசிரியன்மார் தேவார திருவாசகமாகிய அருட் பாடல்களே வழங்கியுள்ளனர். வேத சிவாகமக் கருத்துக்கள் தேவார திருவாசகங்களுள் இடையீடின்றி எங்கும் விரவியிருப்பதை நமது முன்னேர் பலரும் எழுதியும் பேசியும் போற்றியுள்ளார்கள்.

சிவபெருமானது பரத்துவ உண்மையை விளங்குகின்றதும், ஆன்மாக்களின் மலமாயா கன்மபாசங்களே அறவே ஒழித்து அவைகளுக்குச் சிவப்பேற்றை வழங்குகின்றதும், உலகியலில் உடற்பிணி ஆகிய துன்பங்களே அகற்றி இன்புறுத்துகின்றதும், திருநீறே.

அப்பரடிகள் தமது தேவாரத்தில் நூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் திருநீற்றைக் குறிப்பிட்டு அதன் பெருமையை விளக்கியுள்ளார்கள்.

சிவபெருமானது திருமேனி முழுவதிலும் திருநீறு பூசப் பெற்றிருப்பதை வேத சிவாகமங்கள் பல இடங்களில் சொல்லித் துதிக்கின்றன. கங்காளனுகிய கடவுள் பூசுகின்ற திருநீற்றை மங்காமல் பூசி மகிழும் தொண்டர்களுக்கு வினேகள் தங்காஎன்றும், சிவகதிசாரும் என்றும், சிங்காரமான திருவடிப் பேறு சித்திக்கும் என்றும் திருமூல தேவநாயனுர் தமது திருமந்திரத்தில் குறிப்பிடுகின்றுர்.

ஆண்டவனும் அடியார்களும் திருநீற்றை நிறையப்பூசி அருள் வழங்குதலும் அருள் பெறுதலும் செய்கின்றுர்கள் என்பதை அப்பரடிகள் திருவாக்கு ஆங்காங்கே நினைவுபடுத்திச் செல்லுகிறது.

பொய்ச் சமயமாகிய சமண சமயத்தை விட்டுத் திருவதிகை வீரட்டானப்பெருமானது நல்லருளால் திலகவதியார் திருமுன்னர் வந்த

அப்பரடிகளுக்கு அம்மையார் முதற்கண் வழங்கியது திருநீறே யாகும். இதனைச் சேக்கிழார் சுவாமிகள் "வெள்ளிக் குன்றுடையான் திருநீற்றை அஞ்செழுத்து ஓதிக் கொடுத்தார்" என்று குறிப்பிடுவார்கள். அம்மையாரிடமிருந்து பெற்ற திருநீற்றை அப்பரடிகள் அணிந்துகொண்ட முறையை "திருவாளன் திருநீறு திலக வதி யாரளிப்பப், பெருவாழ்வு வந்ததெனப் பெருந்தகையார் பணிந்தேதற்றங்கு, உருவார அணிந்து" என்று திருத்தொண்டர் புராணம் கூறுகிறது.

சமயப் பிரவேசத் தொடக்கத்திலேயே திருநீறு அப்பரடிகளால் போற்றி ஏற்றுக்கொள்ளப் பெற்றது. இதன் சிறப்பை அப்போது அவர் ஓதியருளிய "கூற்ருயின வாறு" என்னுந்தலைப்பை உடைய பதிகத்தின்மூன்ருந்திருப்பாடலில் "பிணிந்தார் பொடி கொண்டு மெய்பூசவல்லீர்" என்று சிவபெருமான் திருநீறு பூசும் வன்மையைக் குறித்துக் காட்டி விளக்கியருளியுள்ளார். இங்குச் சிவபெருமானைத் திருநீறு பூசுபவர் என்றுகூருமல்; பூசவல்லவர் என்று கூறியருளியதன் நுட்பம் சிந்தித்தற்குரியதாகும்.

சிவபெருமான் ஒருவரே ஆதி நடுஅந்தமிலாஅளவில் சோதி என்பதும், திருமால், பிரமனுதியோர் சிவபெருமானுற் செய்யப் பெறுகின்ற தோற்றநிலை ஒடுக்கங்களுக்கு உட்படுவார் என்பதும் அப்பரடிகளால் 'நூறுகோடிப் பிரமர்கள் நொந்தினுர், ஆறு, கோடி நாராயணர்அங்ஙனே, ஏறுகங்கை மணல் எண்ணில் இந்திரர், ஈறிலாதவன் ஈசன் ஒருவனே" என்னும் திருக்குறுந்தொகையில் உணர்த்தப்பெறுகின்றது. படைத்தல் காத்தலாகிய பெருந்தொழில்களுக்குத் தலைவர்களாக விளங்கும் கடவுளின் வீந்த உடற்பொடி சிவபெருமான் திருமேனியில் பூசப் பெற்றிருப்பது பற்றி, அதைப் பூசுவதற்குரிய வல்லமை அவரிடம் மட்டுமே உள்ளதென்பதை உணர்த்தவே "பூசவல்லீர்" என்ற சொற்ருெடரை அமைத்தருளினுர்.

ஐந்தாம் திருமுறையும், அப்பரடிகளின் இரண்டாம் திருமுறையுமாகிய திருக்குறுந்தொகைப் பகுதியில், சிவபெருமான் நிலை பெற்றுத் தங்குமிடங்களில் ஒன்று திருநீறணியும் திருத்தொண்டர்களது உள்ளம் என்று அடிகள் அருளுகின்ருர்.

மற்ருெரு திருக் குறுந்தொகையில் சிவனடியார்களதுதிருவேடங்களுள் சிறந்ததாகிய திருநீற்றை, யார் அணிந்திருக்கிருர்களோ அவர்களது உள்ளங்களைப் பெருமான் தனது நிலைக்களமாகக் கொள்வாரென்று அப்பரடிகள் "வெள்ளை நீறணி மேனியவர்க்கெலாம், உள்ளமாய பிரானுர் உறைவிடம், பிள்ளை வெண்பிறை சூடிய சென்னி, கள்வன் சேர்கடம் பூர்க் கரக்கோயிலே' என்று கூறியருளுகின்ருர்.

திருவாஞ்சியத் திருக்குறுந் தொகையில் அருளை வழங்குகின்ற ஆண்டவனும் அருளைப் பெறுகின்ற அடியார்களும் திருநீறு பூசிய சிறப்புடையவர்களென்பதையும், திருநீறு பூசிச் சிவபெருமானை வணங்குபவர்களுக்குச் செல்வங்களெல்லாம் மல்கும் என்பதையும் அடிகள் அருளுகின்றார்கள். அது "நீறு பூசி நிமிர்சடை மேற்பிறை, ஆறு சூடும் அடிகள் உறைபதி, மாறுதானெருங் கும் வயல் வாஞ்சியம், தேறிவாழ்பவர்க்குச் செல்வமாகுமே" என்பதாகும். ஆரும் திருமுறையாகிய திருத்தாண்டகப்பகுதியில்திருநீறு பூசிய மெய்யடியார்களது திருவுள்ளத்தில் மட்டுமின்றி அவர்களை வழிபடுகின்ற அடியார் உள்ளத்திலும் சிவபெருமான் வீற்றிருப்பார் என்று அருளிச் செய்கின்றார்.

அப்பரடிகளால் சிறப்பித்துப் பேசப்படுகின்ற திருநீற்றை நிறையப்பூசி நித்தலும் நியமம் செய்து இம்மை மறுமை நலங்களை எளிதில் அடைவோமாக.



## கடன் தொல்லைகள் தீர

உங்களுக்கு ஏற்பட்ட கடன் தொல்லைகள் தீருவதற்கு தினசரி ஒருமுறை, அல்லது இருமுறை ஸ்ரீ அபிராமி பட்டர் அருளிச் செய்த அபிராமி அந்தாதியில் 54-வது பாசுரம் பாராயணம் செய்யுங்கள். அந்தப் பாசுரம்,

இல்லாமை சொல்லி ஒருவர்தம் பால்சென்று இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவி ரேல்நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்றகயவர்தம் பால் ஒரு காலத்திலும்
செல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே.

# உண்மைச் சைவன் யார்?

## கயப்பாக்கம் திரு. சோமசுந்தரம் செட்டியார்

சைவம் சிவசம்பந்தமுடையது. இதனை அநுட்டிப்போர் சைவர்.

விபூதி, உருத்திராக்கம் சிவ சின்னங்கள்-இவற்றை அணிந்து கொண்டால் போதுமா?

பரமேசுவரனது நாம மந்திரம் திருஐந்தெழுத்தாகும். இதனை விதிப்படி எண்ணினால் போதுமா?

சீவகாருண்யம் சைவத்தின் அடிப்படைக் கொள்கை. புலால் உண்ணாதிருந்தால் மட்டும் போதுமா?

"ஈசான் : சர்வ வித்யானும்" என்பது மறை. எல்லா (வித்தைகளுக்கும்) மொழிகளுக்கும் தலைவன் சிவ பெருமானே! எல்லா மொழிகளும் அவனுடையவை. எனவே, ஒரு மொழியில் விருப்பும் ஒரு மொழியில் வெறுப்பும் கொள்பவன் உண்மைச் சைவனல்ல என்பது உறுதி. ஏன்?

சைவர்களது பிரமாண நூல்கள் தேவாரம் முதல் பெரிய புராணம் ஈறாகவுள்ள தமிழ் வேதமாகிய பன்னிரு திருமுறைகளும் பதினான்கு சித்தாந்த சாத்திரங்களுமாம். இவற்றை விதிப்படி ஓதினால் மட்டும் போதுமா? வடமொழியும், தென் தமிழும் இறைவன் இரு கண்கள் போன்றவை. இதனை ஒட்டியே ஸ்ரீ மாதவச் சிவஞான முனிவரும், "இரு மொழிக்கும் முதற் குரவர் கண்ணுதலார்" என்று அருளிப் போந்தார். ஒரு மொழியிடம் வெறுப்பு கொண்டால் ஒரு கண்ணை ஊறு செய்வதை ஒக்குமல்லவா? எனவே எம்மொழியிடமும் வெறுப்பு உண்மைச் சைவனுக்கு இருக்கக்கூடாது.

தமிழினிடம் ஆர்வம் இருக்கலாம். இது இயற்கை. விரும்பத்தக்கதுமாம். ஆனால் தமிழ் மொழியில் வெறியிருக்கக்கூடாது.

இனி ஒவ்வொரு சைவனும் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்று அரற்றுவதை எங்கும் காண்கிறோம் அல்லவா? இப்படியிருக்கும்போது பிராமண சமூகத்தினிடம் ஏன் வெறுப்பு? அவர்களும் ஒருகுலத்துள் அடங்கினவர்தானே! பிராமணன் என்றாலும் அந்தணன் என்றாலும் பொருள் ஒன்றுதான்.

வடமொழி வேதம் "கோப்ராமணேப்ய I சுபமஸ்து நித்யம்,

லோகா: சமஸ்தா: சுகினோ பவந்து" என்று கூறுகிறது. இதனை விளக்குவான் போலவே அந்தணர் குலத்தில் தோன்றி வேத நெறியையும் சைவ நெறியையும் விளக்கிய திருஞானசம்பந்த சுவாமிகள் தம் அருமையான தேவாரப் பதிகங்களுள் ஒன்றானதும், மிக முக்கியமானதும், சைவமே சிறந்த உண்மைச் சமயம் என்று வைகையாற்றில் வெள்ளத்தை நீந்தி எதிர் ஏறிச் சென்று சைவமே உண்மைச் சமயம் என நிருபித்துக்காட்டிய பெருமையை உடையதுமான "திருப்பாசுரம்" முதல் திருப்பாட்டில் "வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்" எனத் தெளிவாகக் கூறினர்கள்.

திருவள்ளுவ நாயனுர் அருளிய பொதுமறையாகிய திருக்குறளில், "அந்தணர் என்போர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும்,செந்தண்மை பூண்டு ஒழுகலான்" எனக் கூறியதைச் சிந்திக்கவும். இங்குள்ள அந்தணர் என்ற சொல்லுக்குப் பரிமேலழகர், "எல்லா உயிர்கண் மேலும் செவ்விய தண்ணளியைப் பூண்டொழுகலான் அந்தணர் என்று சொல்லப்படுவார் துறவறத்தின் நின்றவர். பூணுதல்— விரதமாக் கோடல்; அந்தணர் என்பது அழகிய தட்பத்தினையுடையாரென ஏதுப் பெயராகலின், அஃது அவ்வருளுடையவர் மேலன்றிச் செல்லாதென்பது கருத்து. அவ்வாருணயுடையராயினும் உயிர்கண் மாட்டருளுடையரென்பது இதனுற் கூறப்பட்டது."

உண்மைச் சைவன் தினமும் தேவாரத் திருமுறைகளை ஓதத் தொடங்குமுன், முதலில் கூறிக் கொள்ள வேண்டிய செய்யுள் பின்வரும் நால்வர் துதியல்லவா?

"பூழியர்கோன் வேப்பொழித்த
புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில்
அணைத்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர்
வன்றெண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத
வூரர்திருத்தாள் போற்றி."

இதில் பேசப்பட்ட நால்வரும் நம் சைவ சமய ஆசாரிய மூர்த்திகளல்லவா? இவர்களுள் திருஞானசம்பந்த சுவாமிகள் சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகப் பெருமான் ஆகிய மூவரும் (அப்பர் சுவாமிகள் மட்டும் வேளாளர் குலத்தவர்) அந்தணர் குலத்தில் தோன்றியவர்கள் ஆயிற்றே!

உண்மைச் சைவன் கடைத்தேறவேண்டுமானல் நால்வரை வணங்கவேண்டும். இவர்களுள் ஒருவர் அப்பர் சுவாமிகள் மட்டும் போதுமென்ருல் இவர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளை வணங்கினரே. இதற்கென்ன பதில் கூறமுடியும்? ஆதலால் அந்தணரை வெறுப்பதால் 3

ஆசார்ய மூர்த்திகள் போய்விடு கிறுர்கள். பிறகு வடமொழியை வெறுப்பதால் நம் உயிரை ஈடேற் றும் (பஞ்சாட்சரம்) திரு ஐந் தெழுத்தும் போய்விடும். இவ் விரண்டையும் கைவிட்டால் மக் கள் சிறப்பாகச் சைவர்கள் வா ழ வே முடியாது; வாழ்ந் தாலும் ஈடேறமுடியது; உயிரும் உறுதியைப்பெருது; நிலைத்த இன் பத்தைப் பெறமுடியாது. ஆத லால் உண்மைச் சைவன் ஒவ் வொருவனும் வடமொழியையும், அந்தணர் குலத்தையும் ஒருபோ தும் வெறுத்தல் கூடாது. ஏன்? சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் தேவாரத்தில் கூறியிருப்பதைக் கடைப்பிடிப்பவன்தான் உண் மைச் சைவன்.

# பொதுவான போதனைகள்

## அன்னை ஸ்ரீ ஸாரதா தேவி

ஒரு மனிதனுக்கு இச்சைகள் இருக்கும்வரை அவனது பிறப்புச் சுழலுக்கு முடிவேயில்லை. அவ்விச்சைகளே அவனை ஒன்றின் பின் ஒன்றாகப் பல பிறப்புகளை எடுக்கச் செய்கின்றன. ஒரு துண்டு கற்கண்டைச் சாப்பிட வேண்டும் என்ற விருப்பம் ஒருவனிடத்து இருந்தாலும்கூட அவனுக்கு மறுபிறவியுண்டு.

பணக்காரன் இறைவனுக்கும் அவனது அடியார்கட்கும் தம் பணத்தால் பணிபுரியவேண்டும்; ஏழையோ, இறைவனது நாமத்தைத் திரும்பத் திரும்ப ஜெபிப்பதன் மூலம் இறைவனை வழிபட வேண்டும்.

கடவுளிடத்து ஒருவற்குள்ள அன்பு, அவனது உள்ளுணர்ச்சிகளுக் கேற்பவே அமைந்துள்ளது. இறைவனிடத்து அன்பே அத்யாவசியமானது.

பிருந்தாவனத்தில் வாழ்ந்த இடைப் பிள்ளைகள் ஜெபமும், தியானமும் செய்தா ஸ்ரீ கிருஷ்ணனை அடைந்தார்கள்? இன்பப் பரவசமாக்கிய அன்பினாலேயே அவனை உணர்ந்தார்கள்.

நமக்கு முக்கியமானது அன்பே. அதன் மூலமே ஸ்ரீ இராமகிருஷ்ணரது ஆன்மிகக் குடும்பம் வளர்ந்து முன்னேறியிருக்கின்றது.

தனது குருவினிடத்திலேயே ஒருவனுக்கு பக்தி இருக்கவேண்டும். குருவின் தன்மை எத்தன்மைத்தாயினும், இடைவிடாது குருவினிடத்து பக்தி செலுத்துவதன் மூலம் சீடன் முக்தியடைகிறான்.

எல்லாக் காரியங்களையும் இறைவனே செய்கிறான் என்பது உண்மையே. ஆனால் அதை உணர்பவர் வெகு சிலரே. கர்வத்தினால் வெறிகொண்டே, மக்கள் இறைவனது துணையின்றி, தாங்களே எல்லாவற்றையும் செய்வதாகக் கருதுகிறார்கள். அவனை நம்பியிருப்பதில்லை. தன்னை நம்பியிருப்பவரை எல்லாத் துன்பங்களினின்றும் இறைவன் காப்பாற்றுகின்றான்.

நீங்கள் சிறிதளவு பிராணாயாமம் செய்து பழகலாம். ஆனால் அதை அதிகமாகப்பழகினால் மூளை விரைவில் உஷ்ணமடைந்துவிடும். மனம் தானாகவே அமைதியாக இருக்குமாயின் பிராணாயாமம் செய்ய வேண்டுவதன் அவசியமென்ன? பிராணாயாமமும் ஆஸனங்களும் ஒருவனிடத்து மறைவான சக்திகளை வெளிப்படுத்துகின்றன. அச்சித்திகள் ஒருவனைத் தவறான வழியிற் செலுத்துகின்றன.

குருநாதரைப்பற்றிய கனவுகள் யாவும் உண்மையானவையே. ஆனால், அவர் கனவு காண்பவரைத் தாம் கண்ட கனவைப் பற்றிப் பிறரிடமோ அன்றித் தம்மிடமோ உரைப்பதையும் தடுத்தார்.

# திருமூல நாயனர்



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

திருநந்தி தேவரிடத்தில் உபதேசம் பெற்ற நான்மறைச் சிவயோகியர் ஒருவர். அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்ற எண்சித்திகளையும் பெற்றவர். திருக்கயிலையில் இருந்தார்.

இவர் அகத்தியருடைய நண்பர். சிலநாள் அவருடன் இருக்க விரும்பினர். பொதிய மலையை நோக்கி விண்வழியே வருகின்ற போது திருக்கேதாரம் நேபாளம் பசுபதி நாதம் முதலிய திருத்தலங்களைத் தொழுது கங்கையில் ஆடிக் காசியை வணங்கினர்.

திருப்பருப்பதம், திருக்காளத்தி, திருக்கச்சி, திருவருணை, திருத்தில்லை முதலிய தலங்களையும் சேவித்தார்.

சிவபெருமானுக்கு நஞ்சு அளித்ததனுல் கடலின் மீது விருப்பம் இன்றி, தண்ணீர்முழுவதும் நிலத்திற்கு பாய்ந்து, கடல் வயிறுநிறையாமற் சிறிதே பாயும் காவிரியின் கரையை அடைந்தார்.

காவிரியில் ஆடி திருவாவடுதுறையைப் போற்றி அப்பால் சென்ருர். அங்கு பசுக்குலங்கள் அம்மா என்று வாய்விட்டு அரற்றுவதைக் கண்டார். கருணையே வடிவான அவர் அதன் காரணம் என்ன என்று பார்த்தார்.

சாத்தனூரில் ஆயர் குலத்தினஞகிய மூலன் என்பான் அரவந் தீண்டி மாண்டு கிடந்தான். அவனுல் அன்புடன் மேய்க்கப்பெற்ற ஆனினங்கள் கண்ணீர் சிந்தி அழுவதையறிந்து, தமது உடம்பை

ஒருபுறம் பாதுகாவலாக வைத்து அவன் உடம்பில் புகுந்து எழுந்தார். பசுக்கள் மகிழ்ந்தன. ஆன் குலங்களைச் சாத்தனூரில் சேர்த்தார் திருமூலர்.

மூலன் மனைவி இவரைத் தன் இல்லத்துக்கு அழைத்தாள். திருமூலர் ஒரு பொதுமடத்தில் அமர்ந்தார். ஊரவர் அவர் பற்றற்ற பரமயோகியென்று உணர்ந்தார்கள்.

பின்னர் வைத்த இடத்தில் அவருடைய உடம்பு காணப் பெறவில்லை.

தம்மைக் கொண்டு தமிழில் ஆகமக் கருத்தை வெளியிடுமாறு கருதிய சிவபெருமான் திருவுள்ளம் இது என உணர்ந்தார்.

திரு ஆவடுதுறையுள் அரசமரத்தின் கீழ் அமர்ந்து சிவயோகம் புரிந்து ஓராண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் செய்யுள்கள் கொண்ட திருமந்திரத்தைப்பாடியருளினர். மூவாயிரம் ஆண்டுகட்குப் பின் திருமூலர் திருக்கயிலையை யடைந்தார்.



# மக்கள் பலவகை இனம்



பகவான்
ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்

மனிதனை ஒரு தலையணை யுறைக்கு ஒப்பிடலாம். உறைகள் கருப்பு, சிவப்பு, பச்சை முதலிய பல நிறங் கொண்டவைகளாக விருக்கலாம். ஆனால் அவைகள் எல்லாவற்றுள்ளும் இருப்பதும் ஒரே பஞ்சுதான். அவ்விதமே மனிதரும், சிலர் அழகாயிருக்கிறார்கள்; சிலர் அழகின்றியிருக்கின்றனர்; சிலர் நல்லவர்களாயிருக்கின்றார்கள்; சிலர் கெட்டவர்களாயிருக்கின்றார்கள். ஆனால், இவர்களெல்லோருள்ளும் உறையும் ஈசுவரன் மாத்திரம் ஒருவனே.

இவ்வுலகில் இரண்டு வகை மனிதர் இருக்கின்றனர். ஒரு வகையினர் புடைக்கும் முறத்தையும், மற்றவர் சலிக்கும் சல்லடையும் ஒப்பர். முறமானது தூற்றும் போது, உபயோகமுள்ள அரிசியை நிறுத்திக் கொள்ளும். அது போலவே பெரியோர் கொள்ளத் தகாதவை பெண், பொன் முதலியவைகளைத் தள்ளி, ஏற்ற ஒரே பொருளாய் இறைவனைத்தம் மனத்தில் நிறுத்தித் தியானம் செய்வர். ஆனால் சல்லடையானது உபயோகப் பொருள்களைக் கீழேவிட்டு, உபயோகமற்றதை நிறுத்திக்கொள்வதுபோல, தாழ்ந்தோர் ஈசுவரனை மறந்துவிட்டு, பொன்னையும் பெண்ணையுமே முக்கியமாகக் கொள்வர்.

சாணத்தை யுருட்டிச்செல்லும் வண்டு போன்றது லௌகிகருடைய மனம். வண்டு சாணத்திலன்றி வேறெதிலும் வசிக்கவிரும்பாது. நறுமணம் வாய்ந்த தாமரை மலரில் தங்கும்படி அதனைப் புகுத்துவீரேல் அது மிக்க வேதனையுறும். அதுபோல உலக வாழ்க்கையில் ஈடுபட்டு அதிலேயே கிடந்துழல்பவர் உலகவிஷயங்களைப் பற்றியபேச்சு ஒன்றைத்

தவிர வேறெதையும் விரும்பார்; ஈசனது மகிமையும் அவர்திருநாமமும் சொல்லப்படுமிடங்களினின்றும் விலகி விடுவர்; வீணை சோம்பேறிகள் பேசும் பேச்சுக்களைக் கேட்டு ஆனந்தமடைவர்.

செம்படவன் வலைக்குள் பலமீன்கள் அகப்பட்டுக் கொள்கின்றன. அவற்றுள் சில வெகுபலமாக வலையைத் தாக்கி அதைக் கிழித்து வெளிச் செல்லும்; சில அங்குமிங்கும் ஓடியலைந்து தப்ப இயலாது திகைக்கும்; மற்றுஞ் சில ஒன்றுஞ் செய்யாது சும்மா இருக்கும். இது போலவே மானிடர்களில் முமுக்ஷுக்கள், தம் சக்தியால் உலகமாகிய பந்தத்திலிருந்து விடுபட்டுச் செல்கின்றனர். சிலர் சிரமப்பட்டும் போதுமான சக்தியில்லாதவராதலால் தப்பித்துக் கொள்ளாதிருக்கின்றனர். மற்றவர்களோ இவ்வுலகத்தில் சம்சார பந்தத்திலிருந்து விடுபட இச்சிப்பதேயில்லை.

செம்படவர்குலப்பெண்ஒருத்தி ஒரு நாளிரவு மீன் விற்றுவிட்டு வீட்டிற்குப் போய்க்கொண்டிருந்த போது, வழியில் புயல் பலமாய் அடித்தது. ஆதலால், அவள் ஒரு பூ விற்பவன் வீட்டில் அன்றிரவு தங்கினாள். அவன் மிக்க அன்போடு அவளுக்கிடமளித்து உபசரித்தான். தன் வீட்டில் புஷ்பங்கள் சேகரித்து வைக்கப்பட்டிருந்த ஓர் அறையின் பக்கத்திலுள்ள நடையொன்றில் அன்றிரவைக் கழிக்க அனுமதித்தான். அவ்வளவு சௌக்கியமான இடம் முதலியவை கிடைத்தும் அன்றிரவு அவளுக்குச் சிறிதும் தூக்கம்வரவில்லை. நெடுநேரம் ஆலோசித்தனள்;பின்னர் தூக்கம் வராமைக்குக் காரணம் 'அண்டையிலுள்ள புஷ்பங்களினின்று வீசும் சுகந்தமே' என்று அறிந்தாள். உடனே அவள் தன்னிடமிருந்த காலியானமீன்கூடையின்மேல் கொஞ்சம் தண்ணீரைத் தெளித்து, அதனைத் தன் மூக்கினருகில் வைத்துக் கொண்டு படுத்தாள். சிறிது நேரத்திற்குள் அவள் ஆழ்ந்தஉறக்கத்தில்அமிழ்ந்தாள். இத்தன்மையதே உலக விஷயங்களில் மூழ்கியவர் நிலைமையும். இவர்களும், உலக விஷயங்களின் அழுகிய துர்நாற்றம் ஒன்றைத் தவிர வேறெவற்றையும் விரும்பார்.

ஒரு புருவினுடைய தொண்டையின் வெளிப்புறத்தைத் தடவிப் பார்த்தால் அதனுள் தானியங்கள் இருப்பதை உணரலாம். அதுபோலவே உலக மாயையில் அகப்பட்ட ஒருவனோடு சற்று வார்த்தையாடினால் அவனது உண்மைக் குணம் வெளிவரும். அவனுடைய மனத்தில் லௌகிக எண்ணங்களும் இச்சைகளும் நிறைந்திருக்கக் காணலாம். உலக விஷயங்களிலே நாடுவர் இத்தகைய மனிதர்; ஈசுவரனைப் பற்றிய சம்பாஷணைகளை அவர்கள் விரும்பார்.



# காந்திஜியின் பொன்மொழிகள்



உண்மையை(சத்தியம்)த் தான் நான் கடவுள் என்று தொழுகிறேன்.

உண்மையில் (சத்தியம்) அழகைக் காண ஜனங்கள் தவறி விடுகிறார்கள்; அதைக் காணும் சக்தியற்ற குருடனாகவே மனிதன் இருக்கிறான்.

ஒரு ஜைனமுனி கூறியதுபோல், அஹிம்சையைவிட உண்மையிடத்தில் (சத்தியம்) எனக்கு பக்தி அதிகம்.

இதய பரிசுத்தத்தில் தான் உண்மை அழகு இருக்கிறது.

சத்தியத்தை நாடுபவர் தான் ஒரு தூசியை விட தாழ்வானவர் என்று கருதவேண்டும்.

சத்தியம், அஹிம்சை மூலம் இந்தியா தன் பிரச்னைகளைத் தீர்த்துக் கொள்ளுமானால், உலகம் அதன் மூலம் ஓர் மாபெரும் பயனை யடைந்துவிடும்.

உண்மை அரசு செலுத்துமிடத்தில் வெற்றி தோன்றும்.

சுருக்காகப்பேசுவோரின் வார்த்தைகளில் ஆழ்ந்த சிந்தனை தேங்கியிருக்கும்.

ஆண்டவனின் அருளும் பலமுமின்றி அஹிம்சைவாதியால்எதையும் செய்ய முடியாது.

அஹிம்சா தத்துவம் ஒரு நாட்டை பரிசுத்தமான ஜனநாயகத்தில் கொண்டு போய் விடும்.

கோழைத்தனம், ஹிம்சை இரண்டில் எதை மேற்கொள்வது என்று தவிர்க்க முடியாத சந்தர்ப்பம் ஏற்பட்டால் ஹிம்சையை மேற்கொள்ளும்படியே நான் உபதேசிப்பேன்.

தற்காப்புக்கு, அடுத்தவனைக் கொல்லும் சக்தி தேவையில்லை. தானே சாவதற்குரிய மன உறுதி தான் தேவை.

அன்பும், அஹிம்சையும் உள்ளத்தில் ஊறியிருந்தாலன்றிச் சேவை செய்வதென்பது சாத்தியமே இல்லை.

அன்பு எதையும் கேட்பதில்லை; கொடுக்கிறது.

உண்மையினுலும், அன்பினுலும் நாம் உலகத்தையே வெற்றி கொள்ள முடியும் என்பது என் உறுதியான நம்பிக்கை.

அஹிம்சைப் போர் கூர்மையான வாளை விடப் பயங்கரமானது.

அஹிம்சையும், சத்தியமுமே எனது கடவுள்.

என் எல்லா செயல்களிலும், மணிகளைக் கோர்க்கும் இழை போல் அஹிம்சை இருக்கிறது. அஹிம்சை இடம்பெருத ஒருசெயலையும் நான் செய்ததில்லை.

உண்மையான அன்பை வாய்ச்சொல் வெளிப்படுத்தாது; சேவை தான் வெளிப்படுத்தும்.

சத்தியாக்கிரகத்தில் தோல்வி என்ற பேச்சே கிடையாது.

சத்தியாக்கிரகம் என்பது எல்லாக் காலங்களுக்கும் பொருந்தக் கூடிய ஒரு நியதி.

தவறு செய்வதில் பிழையில்லை; ஆனுல், தவறு செய்ததை அறிந்துகொண்டபின்னர், அதைத் திருத்திக் கொள்ளாமலிருப்பது தவறு ஆகும்.

ஒரு சத்தியாக்கிரகியின்வெற்றி மெஜாரிட்டி பலத்தினுல் ஏற்படுவதல்ல; மனச்சாட்சியின் வலிமையால் ஏற்படுவதாகும்.

சுவர்க்கத்துக்குப் போகக் கூட ஒரு சத்தியாகிரகி சாத்தானுடைய இறக்கைகளில் ஏறமாட்டான்.

குறைபாடுகள் எனக்கு அதைரியத்தை உண்டாக்காது. அதற்குப் பதிலாக அவை என்னைப் பரிசுத்தப்படுத்தும்.

எண்ணற்ற தியாகங்கள் செய்யும் தகுதி படைத்த நாடு அளவிலாத கீர்த்தியுடன் விளங்கும்.

மரணத்தின் மடியில் தலைவைத்துப் படுக்கும் நாடு கீர்த்தி வாய்ந்தாக விளங்கும்.

இலட்சியத்திற்காக நம் உயிர்களைத் தியாகம் செய்ய நாம் தயாராக இருந்தால், பணம் ஒரு பொருட்டே அல்ல.

பழிவாங்கும் மனப்போக்கு இல்லாமல் நாம் நம்பிக்கைக் கொண்டுள்ள இலட்சியங்களுக்காக உயிரையும் துறக்கும் தெய்வீகக் கலையை நாம் மறந்துவிட்டோம்.

பாலில் சர்க்கரை கலந்து விடுவது போல நாம், மக்களுக்காக நம்மையே தியாகம் செய்துகொள்ளவேண்டும்.

நமது இலட்சியத்தை அடைய நாம் தூசியை விட அடக்க முடையோராக இருக்கவேண்டும்.

# ஸ்ரீ சாந்தானந்தர்

## அருள்வாக்கு



நெஞ்சே! நல்லறிவினால் மேன்மையுற்றோர் பெருமை கொள்ளார்.

ஈசலுக்கு அழிவுகாலம் வரும் பொழுது இறகு முளைக்கும். மனிதனுக்கு அழிவுகாலம் வரும் பொழுது அகங்காரம் முளைக்கும்.

மனமே! எல்லா நற்குணமும் பொருந்தியவராக தம்மைத் தாமே மதித்துக் கொள்பவரைப் போல் இராதே.

நான் உயர்ந்தவன் என தன்னைத்தானே மதித்துக் கொள்வது எதுவோ அதுவே அஹங்காரம் என்று அறிவாயாக.

ஸத்குரோ! உன்னை நான் அடைவதற்கு என்னை நான் என்று ஈடு கொடுக்க இசைவேனே!

தீமை புரிவனுக்குக் கெடுதி செய்ய நீ யோசித்துக் கொண்டிருக்க வேண்டியதே இல்லை. நதிக்கரையிலுள்ள மரம் வீழ்வது போல அவன் தானாகவே வீழ்ச்சியடைவான்.

பணிவுடன் இரு. நீ கர்வப்படும்படி உன்னிடம் என்ன இருக்கிறது?

எவன் கஷ்டத்தை சகிக்கும் வகை அறிந்தவனோ அவனே அமைதியை அனுபவிப்பான்.

ஸத்குரோ! உண்மைப் பொருள் நீ என்று உன்னை நான் உணர்வேனாக.

தண்ணீர்ப் பந்தலில் சந்திக்கும் வழிப்போக்கரைப் போல் நாம் கூடுகிறோம். சில காலத்திற்குப் பின் பிரிகிறோம். இது விதியின் விளையாட்டு என உணர்.

மதியீனர் உடலையேதான், தான் என்று எண்ணி வீணாகத் துன்புறுகின்றனர்.

உண்மையை உணர்ந்தவர்கள் நிலைப்பதையும், நீங்குவதையும் நினைத்து வருந்துவதில்லை.

எல்லாச் செல்வங்களிலும் அருளாகிய செல்வமே மேலானது. பொருள்களாகிய செல்வங்கள் அற்பரிடத்தும் உள்ளன.

மனமே! அருள் உடையவனுக்கு நரகம் இல்லை.

நான் நான் என்னும் ஆணவம் முற்றிலும் ஒழியவேண்டும்.

ஸத்குரோ! என் உள்ளத்தினுள் உன்னை நான் என உணர அருள் புரிவாயாக.

தீங்கு செய்தவனைத் தண்டித்தல் ஒரு நாள் இன்பம். பொறுத்தல் முடிவிலாப் புகழ்.

ஒழுக்கம் தவறி நடப்பவர்கள் பலவிதப் பாபங்களைச் செய்கிறார்கள்.

தம்மைக் கொடுத்தோருக்கு இறைவன் தன்னையே கொடுப்பான்.

இறைவனடிப் பற்றி வாழத் தெரிந்தவன் எதிலும் மயங்க மாட்டான்.

பூமியைப்போல் நீ கடவுளை நம்பி எது வந்தாலும் பொருத்துக்கொள்.

காற்று எங்கும் சஞ்சரிப்பதைப் போல் நீ ஒன்றிலும் தொடர்புராது சஞ்சரித்து வா.

விட்டில் பூச்சி நெருப்பைக் கண்டு அழிவதுபோல் மனிதன் காமத்தால் அழிகிறான்.

ஆசை உன் அழிவிற்குக் காரணம் என்று அறிந்துகொள்.

மனிதர்கள் க்ஷீணதசை அடைவதற்குக் காரணம் சுயநலப் பற்றுகும். நாம் எண்ணும் ஒவ்வொரு எண்ணமும், செய்யும் செயலும் உடனே நம்மைத் தாக்குகின்றன.

ஆசைகள் கடமை என்ற வேடம் பூண்டு நம்மை மயக்க முயலும். நிராசை நாளடைவில் ஞானமாக வடிவெடுக்கிறது.

பற்றும் ஆசையும் உள்ளத்தில் கவலையையும், பயத்தையும் உண்டாக்கும்.

பிறருடைய குற்றம் குறைகளைக் கண்டுபிடித்து உன் மனதைக் கெடுத்துக்கொள்ளாதே.

முதலில் ஆசை அமிர்தம் போல் தோன்றும். முடிவில் விஷமாகும்.

உடல் உணர்ச்சி உடைத்திருப்பவர்க்கும் பேரன்புக்கும் வெகு தூரம்.

குருவிற்கு தொண்டு புரிவதற்கு ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு நிமிஷமும் ஏற்ற காலம்.

குருவிற்கு அதிக உதவி செய்திருக்கிறேன் என்று நினைத்தால் குரு அருள் கிடைக்காது.

நாட்டமென்றே இரு; ஸத்குரு பாதத்தை நம்பு.

பொம்மலாட்டமென்றே இரு பொல்லா உடலை அடர்ந்த சந்தைக் கூட்டமென்றே இரு. சுற்றத்தை வாழ்வைக் குடங்கவிழ் நீர் ஓட்டமென்றே இரு! நெஞ்சே! உனக்கு உபதேசமிதே.

குரு வாக்கியத்தில் த்ருட விஸ்வாசமிருந்தால் முக்தி உன் கையிலேயே இருப்பதை உணர்வாய்.

குருவினடி பற்றி வாழத் தெரிந்தவன் எதிலும் மயங்கயாட்டான்.

அன்போடு உழைக்கும் ஒருவன் விளைவு பற்றி எண்ணவே மாட்டான்.

# ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கமும் அதன் கைங்கர்யங்களும்

சென்ற நூற்றுண்டின் பிற் பகுதியில் ஆஸ்திக மதம் தழைத் தோங்கவும் உலகத்திலுள்ள சகல ஜனங்களும் உய்யும் மார்க்கத்தை வெளியிடவும் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் அவதரித்தார்.

மணம் கமழ்ந்து மது நிறைந் துள்ள மலரைத் தேனீக்கள் மொய்ப்பது போல் அம்மகானை ஆத்மிய விருத்தியில் வேட்கை யுள்ள அடியார் பலர் அடைந்த னர். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் அன்னவருக்கு அவரவர் இயல் புக்கு ஏற்பவும் சக்திக்கும் தகுந்த வாறு சாதனைகள் செய்து முக்தி யடையும் வழியைக் காண்பித் தார்.

அவர் நிருவாண மெய்திய பிறகு அவரது சிஷ்யர்கள் ஒன்று கூடி மனித சாதியார் உய்யும் படிக்காக அவருரைத்த மார்க்கங் களை உலகினருக்கு வெளிப்படுத்த வும் அதனேடு தாம் உய்யும் வழி யைக் கைக்கொள்ளவும்ஓர் சங்கம் நிறுவினர்.

இச் சங்கத்தின் ஆதரவின் கீழ் மடமொன்று நிறுவப்பட்டது. இம்மடத்திற் சீலமும் திடமனதும் ஆன்மார்த்த வேட்கையும் உள்ள பலர் சேர்க்கப்பட்டனர். அவர்கள் ஆதியில் பிரமசாரி களாய் அவரவர் இயற்கைக்குத் தக்கபடி சாதனை செய்ய விடப் பட்டனர்.

ராஜயோகம், பக்தியோகம், ஞானயோகம் என்னும் பலவித சாதனைகளில் அவரவர் இயற் கைக்கு எது பொருந்தியதோ அவ்வழியில் சங்கத்தின் தலைவர் களால் பயில்விக்கப் படுகின்றனர். பல வருஷங்கள் கடினமான சாதனைகள் செய்து அவர்கள் பரி பக்குவ நிலை யடைந்தவுடன் அவர்களும் ஸந்யாஸ ஆச்ரமத் தில் ஏற்றுக் கொள்ளப்படுகின்ற னர். இவ்வித மடங்கள் பல இக் காலம் உள.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் மோக்ஷம் அடையும் மார்க்கங்கள் பலவுள என்று கூறியுள்ளார். மேற்கூறிய ராஜயோக, பக்தியோக, ஞான யோகங்கள் தவிர இன்னெரு மார்க்கம் நிஷ்காமிய கருமம் என்று கூறியிருக்கிறர். இம்மார்க் கத்தை அப்யசித்தலால் அப்யசிப் பவன் தனது முக்தியைத் தேடு வது போக மற்றவர்களும்

மோக்ஷவாயிலையடைய ஒரு வழி காட்டியாகிறான்.

கடைசியிற் கூறிய சாதனையின் பலனாக ஏற்பட்ட ஸ்தாபனங்கள் பல உள. அவைகளில் முக்கிய மானது ஏழை ஜனங்களுக்கு அன்ன வஸ்திரமளிப்பது. எவ் வுயிருக்குள்ளேயும் நிலையாயிருக் கிறான் ஸ்ரீமத் நாராயணன். அவ் வுயிருக்குள்ளே சிறந்ததாயுள்ள மனித கோடிகளில் அவனது திரு வுருவம் பிரதிபலிக்கிறது. ஆகவே அம்மனித கோடிகளுக்கு அன்ன மளித்து திருப்தி செய்வது அவ னைத் திருப்தி செய்விப்பதா கிறது. ஸ்ரீமந் நாராயணனைத் திருப்தி செய்தவர் முக்தியடைவ திலும் சந்தேகமா?

இன்னொரு ஸ்தாபனம் வெள் ளத்தாலும் காற்றாலும் சேத முண்டான பிரதேசங்களுக்கும் பஞ்சத்தால் வருந்தும் பிரதேசங் களுக்கும் சென்று அங்குள்ள வருக்கு உதவி புரிதலாம். இவ் வேற்பாட்டால் உதவியற்று திகைத்துத் திண்டாடும் அநேக மனிதர்கள் காப்பாற்றப் படுகின் றனர். சமீப காலத்தில் வடவங் காளத்தில் வெள்ளத்தால் அதிக மான சேதம் உண்டான பொழு து ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கம் செய்த உதவியை எவரும் அறி வார்.

பின்பு பிணியாலும் நோயா லும் வருந்தும் ஜனங்களுக்கு இல வச சிகிச்சை செய்து அவர்கள் பிணிகளைத் தீர்த்து பகவானைப் பக்தி செய்ய விடுவதற்கு ஏற் பட்ட ஸ்தாபனம். இவைகளுக்கு சேவாச்ரமங்கள் என்று நாம மளிக்கப் பட்டிருக்கிறது. இவை கள் நாட்டின் பல பாகங்களிலும் இருக்கின்றன.

காசியிலும், இரங்கூனிலும் உள்ள சேவாச்ரமங்கள் மிகச் சிறந்த வேலை செய்து வருகின் றன.

அடுத்தாற்போல் தாய் தந்தை யற்று அநாதைகளாய்ச் சன் மார்க்கத்தில் பயிற்ற எவரு மின்றி வீணே காலத்தைக் கழிக் கும் சிறுவர்களையும் சிறுமிகளையும் ஒன்று சேர்த்து அவர்களுக்கு அன்ன வஸ்திரமளித்து நற் போதஞ் செய்து ஈசுவரன் திரு வடி நிழலையடைய வழி காட்ட அநாத ரக்ஷக சாலைகள் ஏற்படுத் தப்பட்டிருக்கின்றன.

கடினமான சாதனைகள் செய் துள்ளவரும் சிறுவர்களின் மனப் போக்கையும் அவர்களைச் செலுத் தும் வழியையும் அறிந்தவருமான பெரியார்களிடம் இந்த சாலைகள் ஒப்புவிக்கப்பட்டிருக்கின்றன.

பின்னர் இந்து வாலிபர்க்குச் சுத்தமான கல்வியைப் போதித்து அவர்களுக்கு ஹிந்து மதத்தின் மேன்மையையும் அருமையையும் வெளியிடுவதற்காக ஸ்தாபிக்கப் பெற்ற குருகுலங்களும் வித்தியா சாலைகளும் நாம் கவனிக்கற் பாலன. சென்னையில் உள்ள குரு குலத்தின் வரலாறும் நடப்பும் நாம் இங்கு குறிக்கத் தக்கது.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் இந்திய நாட்டினில் மாத்திரமல்ல உலகத்திலுள்ள பல நாட்டினரும் ஈசுவரனையடைய அநுபவ ரீதியில் காட்டியுள்ள போதனைகளை அந் நாடுகளில் பரவச் செய்வதற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கம் பல வாறு உழைத்துவருகிறது. அவற் றில் ஒன்று சாதனைகளில் தேர்ச்சி பெற்ற வாக்கு வல்லமையுடைய சந்நியாசிகளை அயல் நாடுகளுக்கு அனுப்பி அங்குள்ளவருக்கு உப தேசஞ் செய்ய ஏற்பாடுகள் செய் வது.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம் ஸரின்பிரதம சிஷ்யர்களிலொருவ ராகிய ஸ்ரீமத் ஸ்வாமி விவேகா நந்தர் அமெரிக்காவில் இவ்வகை யான கைங்கர்யத்திற்கு அடி கோலினர். இது வேருன்றி அமெ ரிக்காவில் அநேகருக்கு ஆத்மீயத் தாகத்தை எழுப்ப ஸ்ரீமத்ஸ்வாமி களுக்கு பின்னர் அநேக சந்யாசி கள் அங்கு அனுப்பப்பட்டனர். வெகுகாலம் அங்கு தங்கி இவ்வித சேவைசெய்த ஸ்ரீமத் சுவாமி அபேதானந்தர் சின்னுட்களுக்கு முன்னர் தான் தன் தாய் நாட் டிற்குத் திரும்பி வந்தார்.

இறுதியில் ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தார் நம்முடைய நாட்டி லுள்ள கல்வியாளருக்கும் பிறருக் குமாகப் பல நூல்கள் பத்திரிகை கள் மூலமாக ஆத்மீயச் சுடரைக் கொளுத்தி வருகின்றனர். அவை கள் எங்கணும் உலவி உலக விஷ யத்தில் உழன்று வருபவரை எழுப்பி பகவானை அணுகச் செய் கின்றன. நமது "விஜய"மும் இவற்றுள் ஒன்ருகும்.

● காஞ்சி காமகோடி ஸ்ரீ ஆசார்யாள் 1963 ல் இராமேஸ்வரத்தில் அக்னி தீர்த்தக் கரையில் உயர்ந்ததொரு மண்டபத்தை நிர்மாணம் செய்வித்து அதிற் ஸ்ரீ பகவத் பாதாளின் சிலாவிக்ரஹம் பிரதிஷ்டை செய்துள்ளார்கள். இது போன்று கன்னியாகுமரி, ஸ்ரீசைலம், குருக்ஷேத்ரம் போன்ற ஸ்தலங்களிலும் ஸ்ரீ பகவத் பாதாளின் சிலாவிக்ரஹ பிரதிஷ்டை அன்னாரின் ஆக்ஞையில் நிறுவப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

● வாழ்க்கைத் தரத்தை உயர்த்திவிட்டால் சுகவாழ்வு கிடைத்துவிடாது. வாழ்க்கைத் தரம் உயர்ந்தால் மனிதனின் தேவைகள் அதிகரிக்கும். தேவைகள் அதிகரிக்க அதிரிக்க ஆடம்பரம் அதிகரிக்கும். அவற்றைப் பூர்த்தி செய்ய அதிகப் பணம் செலவழிக்க வேண்டும். அது கிடைக்காவிட்டால் கவலைவரும். கவலைவந்தால் அவன் வாழ்வில் மகிழ்ச்சி ஏது?

● கோடி கோடி மக்கள் வீணுகப் போனுலும் ஒருவன் பூர்ணத்வம் அடைந்துவிட்டால் அதுதான் நம் மதத்தின் பிரயோஜனம். அவன் ஒருவன் அனுக்ரஹத்தினுலேயே லோகம் க்ஷேமம் அடையும்.

● சமயம் மக்களிடையே மலராவிட்டால் மனம் பாலைவனமாகிவிடும். மண் பாலைவனமாஞல் அதைச் சோலைவனமாக்க விஞ்ஞானம் பயன்படும். மனம் பாலைவனமாகி விட்டால் விஞ்ஞானம் பயன்படாது. மெய்ஞ்ஞானம்தான் பயன்தரும்.

● விபூதி என்னும் பதம் மேலான ஐஸ்வர்யம் என்ற பொருளைக் கொண்டது. இதை இறைவனும் தன் உடம்பில் பூசிக்கொண்டிருக்கிறுர்.

● அமர்நாத் ஹிமாலயத்தில் ஸ்ரீ நகரிலிருந்து வடகிழக்கில் 96 மைல் தூரத்தில் பெரிய பனியாற்றங்கரையில் அமைந்துள்ளது. அங்கு 150 அடி உயரமுள்ள ஒரு குகையினுள் சிவலிங்கம் பனிக்கட்டி உருவில்காட்சி அளிக்கிறது.

● சிவாலயம் இல்லாத கிராமம் இல்லை. நந்தி இல்லாத சிவாலயம் இல்லை. பக்தர் சிவபெருமானுடன் நந்தியையும் வணங்கித் தங்கள் தங்கள் பக்திப் பிரபக்திகளை வெளியிட்டுக்கொள்கிறுர்கள்.

● கோயிலில் உள்ள திருவிளக்குகளைக் கையால் தூண்டவோ, தூண்டிய கையைச் சுவரில் துடைக்கவோ கூடாது. அதனைத் தலையிலும் தடவிக் கொள்ளக் கூடாது.

● நம் முன்னேர்கள் எழுதத் தொடங்குமுன் முதலில் எழுதுகின்ற உ என்ற பிள்ளையார் சுழி பிள்ளையார் முதற் கடவுள்; இது முதலில் எழுதும் விந்துநாதக் குறி. ஆதலால் பிள்ளையார் சுழி எனப்பெற்றது.

● விநாயகரை உள்ளன்புடன் வழிபடுவோர், நீண்ட ஆயுள், நிறைந்த செல்வம், நன்மக்கட்பேறு, நோயற்ற வாழ்வு, நவநிதிப்பேறு, மன அமைதி முதலிய எல்லா நலன்களும் பெறுவார்கள்.

● திருமகளைவிட்டு நாரணனையோ, நாரணனை விட்டுத் திருமகளையோ, தனிப்பட வழிபடுதல் கூடாது. திவ்விய தம்பதிகளான இருவரையும் ஒருங்கே வழிபட வேண்டும். ஒருங்கே சரண்புக வேண்டும்.

# அருளும் பொருளும்



ஸ்ரீ வி. ஜி. பன்னீர்தாஸ்

அருளும் பொருளும் ஒரு நாணயத்தின் இரு பங்கங்களைப் போன்றவை. இரண்டில் எது தேவை என்று ஆராய்வதைவிட, இரண்டுமே தேவைதாம் என்று தெளிதல் எளிது.

இன்றைய உலகம், பொருள் சேர்க்கும் வாழ்க்கைக்கே சிறப்பிடம் அளிக்கிறது. இன்றைய பொறிஇயல் உலகில் மனிதர் எல்லாரும் பொருள்சேர்க்கும் பொறிகள் ஆகிவிட்டனர்.

பொருள் சேர்ப்பதில் பலர் வெற்றி பெற்றிலர் எனினும், ஆர்வம்மட்டும் எல்லோரிடமும் இருக்கிறது. திருவள்ளுவரை அறியாப் பலகோடி மக்கள், "பொருள் இலார்க்கு இவ்வுலகமில்லை" என்ற குறள் வரியை மட்டும் நன்றாக அறிந்திருக்கின்றனர்.

உடலும் ஆன்மாவும் சேர்ந்தே மனிதன் அமைதல் போன்று, அருளும் பொருளும் சேர்ந்தே வாழ்க்கை அமைகிறது. பொருள் இல்லா வாழ்க்கை துன்ப வாழ்க்கை; அருள் இல்லா வாழ்க்கை விலங்கு வாழ்க்கை.

அருள் இல்லாமல் அறிவை மட்டும் வளர்ப்பதும் சிறப்பு ஆகாது. வெறும் அறிவு, மூளையை மட்டும் தான் வளர்க்கும்! அணுகுண்டுகளைத் தாம் படைக்கும்!

அருள் இதயத்தை வளர்க்கும், மனிதனின் உயர்பண்புகளை வளர்க்கும், உயரிய சமுதாயத்தை உருவாக்கும்.

அருள் நெறி நின்று வாழும் வாழ்க்கை வளம்பெற வேண்டும். அப்போதுதான், போரும், கொடுமையும், ஏற்றத்தாழ்வும் அற்ற சமுதாயத்தை நாம் காண்போம்.

# காஷியரே இல்லாத காபி ஓட்டல்

பழநி மலைமேல் உள்ள காபி ஓட்டலில் காஷியரோ, காஷ் டேபிளோ கிடையாது. பலகாரங்கள் அடுக்கி வைத்திருக்கும் பீரோவில் ஒரு தட்டில் சப்ளையரே நின்றபடி பில்லுக்குப் பணம் வாங்கிப் போடுகிறார்.

இதைப்பற்றி அந்த ஓட்டல் உரிமையாளர் ஸ்ரீ T. V. கிருஷ்ணய்யர் அவர்களிடம் விசாரிக்கிறோம். அவர் சொல்கிறார்.

இந்தப் பழக்கம் ஓட்டல் ஆரம்பித்த நாற்பது ஆண்டுகாலமாகவே நடந்து வருகிறது. பழநி தண்டாயுதபாணியே மலைமேல் வீற்றிருக்கையில் சுவாமிக்கு எதிரில் நாம் டேபிள் போட்டு உட்கார்ந்துகொண்டு காசு வாங்குவது சரியில்லை. அதனால்தான் காஷியரும் கிடையாது. காஷ்டேபிளும் கிடையாது என்கிறார்.

அவர் மேலும் சொன்னார். மலைமேல் சுவாமி தரிசனத்துக்கு வருபவர்கள் ஆச்சாரமாக வருவதால் நாங்களும் வாழை இலையில் தான் பலகாரங்கள் கொடுக்கிறோம். எவ்வளவு கூட்டம் வந்தாலும், இலை என்ன விலை விற்றாலும் தட்டுக்கள் உபயோகப்படுத்துவது இல்லை என்கிறார். நாம் ஆச்சரியப் படுகிறோம்.

இந்தக்காலத்திலும் இப்படி ஓர் ஆச்சாரமான ஓட்டலா பழநி மலைமேல் என்று நாம் ஆச்சரியப்படுகிறோம்.

எல்லாம் பழநியாண்டவர் செயல்தான். நம் கையில் என்ன இருக்கிறது? என்று சொல்கிறார் ஓட்டல் உரிமையாளர்.

# ஸ்ரீமத் ராமகிருஷ்ணனந்த ஸ்வாமிகள்

ராவ்சாஹிப், கொ. ராமஸ்வாமி அய்யங்கார்

இளமையில் இவருக்குச் சசிபூஷணம் என்று பெயர். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரிடம் வந்து சேர்ந்தபின் 'தாயும், பிதாவும் தமரும் குருவும் தனி முதலும்' அவரே என்று, அவருக்கு இரவு பகலாய்த் தொண்டுசெய்து, அந்தப் பேரானந்தத்திலேயே ஈடுபட்டிருந்ததால், பிற்சாலத்தில் இவருக்கு ராமகிருஷ்ணநந்தர் எனும் காரணப் பெயர் ஏற்பட்டது.

"ராமகிருஷ்ணனந்தர் என்ற பெயரை நான் வைத்துக் கொள்ளவேண்டுமென்ற விருப்பம் முதலில் எனக்கு இருந்தது. ஆனல் சசிக்கே அது பொருத்தமானது என்று அந்த ஆசையை நான் விட்டுவிட்டேன்." என்று ஒரு சமயம் விவேகானந்த ஸ்வாமிகள் சொன்னர். இவ்வாறு பெயர் வாய்ந்த வரலாறே ராமகிருஷ்ணனந்த ஸ்வாமிகளின் குருபக்தி மகிமையை விளக்குவதற்குப் போதுமானது.

ஏட்டுக் கல்வி பயனற்றதென்றும், பக்தி ஒன்றே முக்கியம் என்றும் இவர் சிறு வயதிலேயே குருதேவரிடமிருந்து உணர்ந்த வகை அதிசயிக்கத் தக்கது.

இவர் தட்சிணேசுவரத்தில் குருவுக்குப் பணிவிடைசெய்துகொண்டிருந்த காலத்தில், ஒழிந்த வேளைகளில் மத விஷயமான புத்தகங்களைப் படித்து வருவார்.

ஸூபி மதநூல்கள் வேதாந்தத்தின் கருத்துக்கு ஒத்திருப்பதையும், அவற்றின் பரந்த நோக்கத்தையும் கண்டு, அந்த மதத்தின் மூலக்கிரந்தங்களைப் பார்க்க ஆவல் கொண்டார். அதற்காகப் பாரசிக பாஷையும் படிக்க ஆரம்பித்தார்.

ஒரு நாள் படிப்பில் ஆழ்ந்திருக்கையில், குரு இரண்டு மூன்று தடவை கூப்பிட்டது இவர்காதில் விழவில்லை. கடைசியாகக் குரல் கேட்டு பரபரப்புடன் எழுந்து குருமுன் சென்றார். அவர் கடிந்து, "ஆம்; நீ பாரசிகம் படிக்கா விட்டால் உனக்குள்ள ஸ்வல்ப பக்தியும் போய்விடும்! ஆகையால் படி போ. அதுதான் முக்கியம்!" என்றார். அந்த ஒரு வார்த்தை போதாதா? தம்மிடம் இருந்த 15, 20 ரூபா பெறுமான புதுப்புத்தகங்கள் எல்லாவற்றையும் கட்டி அன்றே கங்கையில் எறிந்து விட்

டார். அதுமுதல் பதினாறு வருஷ காலம் ஒரு புத்தகத்தையும் தொட்டாரில்லை. கலை ஞானத்தைப் பெரிதும் மதிக்கின்ற சென்னப்பட்டணம் வந்தபிறகே, தாம் மறுபடி படிக்க ஆரம்பித்ததாய் அவர் சொல்லுவார்.

குருதேவர் மஹாஸமாதிக்குப் பின், சீடர்எல்லோரும்கூடி பாரானகூரில் வாழ்ந்த காலத்தில் அவர்கள் ஒவ்வொருவரும் பட்ட கஷ்டங்களும் செய்த கடுந்தவமும் உலகம் அறியும்.

ராமகிருஷ்ணானந்தர் செய்த பெருந்தவங் குருதேவருக்குப் பூஜையும் அவருடைய அடியார்க்குப் பணிவிடையுமே.

தாயார் குழந்தைகளைக் காப்பாற்றுவது போல் இவர் தம் சகோதரர்களை அக்காலத்தில் ஆதரித்து வந்ததால், இவருக்கு "மடத்தின் அன்னை" என்னும் சிறப்புப் பெயரும் வழங்கி வருகிறது.

குருதேவரின்பிரிவாற்றாமையால் வைராக்கியம் மேலிட்டுப் பொழுதுபோனது கூடத் தெரியாமல், சீடர்கள் தியானத்திலாழ்ந்து விடுவர். அவர்களை ஒவ்வொருவராய்ப் போய் பலவந்தம் செய்து இழுத்து வந்து ராமகிருஷ்ணானந்தர் சாப்பிடச் செய்வார்.

கங்கைக்குப்போய் நீர் சுமந்து வந்து கிடைத்த பொருளைக் கொண்டு தாமே சமையல் செய்வார். இடுப்பில் அழுக்குத் துணியுடன் இவரை வெளியே கண்டவர்கள் பரிசாரகன் என்று ஏளனம் செய்வார்கள். இவர் பிறருடைய வெகுமானத்தையும், அவமானத்தையும் சிறிதும் கவனியாமல், ஒரே நிஷ்டையில் நின்றார். வேறு தீர்த்தமும், வேறு தவமும் இவர் தேடவில்லை.

எல்லாச் சீடர்களும் ஒவ்வொருவராய், பரிவ்ராஜகராய்த் தவம் பூண்டு, ஆசிரமத்தை விட்டுப் போய்விட்ட பொழுது, இவர் மட்டும் குருதேவர் தொண்டு ஒன்றே போதும் என்று, அவரைப் பிரதிஷ்டை செய்திருந்த இடத்தை விட்டு அகலவில்லை.



ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுஜன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. கா.சி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 01-5 பாண்டிபஜார், தியாகராயநகர், சென்னை-17